உ
முருகா
ஓம் தண்டாயுதபாணி துணை.

# திருமுருகன்
# பிள்ளைத்தமிழ்த் திரட்டு

சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர்
உயர்திரு. A. உத்தண்டராம்பிள்ளை I. A. S.
அவர்கள் முன்னுரையுடன்



பழநி ஸ்ரீதண்டாயுதபாணி சுவாமி
தேவஸ்தான வெளியீடு
1957

...ப்பி 2000] [விலை 30 நயா பைசா

...புத்தகம் சென்னை கிடங்குத் தெரு, ஜவுளி வியாபாரம்,
...லசுப்ரமண்யம் கம்பெனியாரால் வெளியிடப்பெற்றது.

உ

முருகா

ஓம் தண்டாயுதபாணி துணை

# திருமுருகன்
# பிள்ளைத்தமிழ்த் திரட்டு

சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர்

**உயர்திரு. A. உத்தண்டராம்பிள்ளை I. A. S.**

அவர்கள் முன்னுரையுடன்



பழநி ஸ்ரீதண்டாயுதபாணி சுவாமி
தேவஸ்தான வெளியீடு
1957

காப்பி 2000]

[விலை 36 நயா பைசா

உ

முருகன் துணை.

தமிழ்நாட்டு
அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர்

**உயர்திரு. அ. உத்தண்டராம் பிள்ளை, I. A. S.**
**அவர்கள்**

# வாழ்த்துரை

---

'சான்றவ ராய்ந்திடத் தக்கவாம் பொருள்
மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த் தொகை
வான்திகழ் தளையென வகுப்பர் அன்னவே'

—கந்தபுராணம்.

சமயம் என்ற சொல்லுக்கு 'மார்க்கம்' 'வழி' 'நெறி' என்று பொருள்கூறுவர். சமயம் என்பது, நன்றாக அமைக்கப் பட்டது, செய்யப்பட்டது என்னும் பொருள்படும். மக்கள் மாக்களாக வாழாமல் தேவர்களாகப் பேரானந்தப் பெரு வாழ்வு வாழ்வதற்கு உதவி புரிவது சமயம். சைவ சமயம் எவராலும் எக்காலத்திலும் தோற்றுவிக்கப்பட்ட சமயம் அல்ல. அது இறைவனைப் போன்று ஆதி அந்தமில்லாதது. பகுத்தறிவு கொண்டு ஆராய்பவர்க்கு, இம்மையிலும் மறு மையிலும் உயிர்க்கு உறுதி பயக்கும் வகையில், சமய உண் மைகளை விளக்குவது சைவ சித்தாந்த நூல்களே யாகும். இறை, உயிர், தளை என்னும் முப்பொருள்களும் நிலைத்து நிற்பவை. அவற்றுள் தளையாகிய பாசத்தை விலக்கி உயி ராகிய பசுபதியினை அடைய வேண்டுவதே வாழ்க்கையின் லட்சியம். இதையே,

'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு' என்றும்,

'ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்' என்றும்,

'யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கும்
உயர்ந்த உலகம் புகும்' என்றும்

வள்ளுவர் விளக்கி யுள்ளார்.

இதற்கு முக்கிய சாதனம் இறைவழிபாடு. இறைவன் மக்களுக்காகக் கொண்ட அருட்கோலங்களுள் சிறந்தது முருகன் வடிவம். முருகன் பெருமையைக் குறித்து எழுதுவதாயின் இவ் வாழ்த்துரை மிக விரியும். கலியுக வரதனை முருகப் பெருமான் பொருள் சேர் புகழைக் குறித்து, பண்டைய நாள் தொட்டுப் பலவகைப் பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. அவற்றுள் பிள்ளைத் தமிழ் என்பதும் ஒன்றாகும்.

இறைவனைக் குழந்தைப் பருவம் உடையவனாகக் கொண்டு, காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுதேர், சிறுபறை எனப் பத்துப் பருவங்களாக அமைத்துச் சந்தப் பாக்களாலும் செந்தமிழ்ப் பாக்களாலும் பருவம் ஒன்றுக்குப் பத்துப் பாடல்களாகப் பாடுவது புலவர் மரபு.

இவ்வண்ணம் புலவர் பெருமக்களால் பாடப்பெற்ற பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்கள் பல உள்ளன. அவற்றுள் தமிழ் நாட்டிலுள்ள முருகப் பெருமான் திருக்கோயில் கொண்டுள்ள பத்துத் திருத்தலங்களிலுள்ள மூர்த்திகளைப் போற்றிப் பரிந்து மகிழ்ந்து பாடியருளிய பத்துப் பிரபந்தங்களைப் பொறுக்கி எடுத்து, ஒவ்வொரு நூலினின்றும் ஒவ்வொரு பருவத்துக்குரிய பகுதியைத் தொகுத்த இந்த

திருமுருகன் பிள்ளைத் தமிழ்த் திரட்டு என்ற அரிய நூலை வெளியிடும் பொறுப்பை ஏற்று இனிது செயலாற்றியவர் குகஸ்ரீ ரசபதி அவர்கள், அப் புலவர்மணி எழுதியுள்ள குறிப்புரைகள் மிகவும் பயனுடையவை. தமிழகத்தின் வடபாலுள்ள திருவிரிஞ்சைத் தெய்வ சிகாமணியின் அபயவரத கரங்களைப் பற்றிக் கூறும் காப்புச் செய்யுளில் தொடக்கமும், தென்பால் திருக்குற்றாலத்தருகே ஓர் குன்றின் மேல் காட்சி அளிக்கும் சிவஞான முத்தி தரு திருமா மலைக் கடவுளிடம், திங்கள் மும்மாரி பொழியச் சேவல் வாழ்க சிறுதேர் உருட்டியருளே என முடிவும் ஆக இந்நூலை அமைத்திருப்பது, பாராட்டுக்குரிய தோர் சிறப்பியல்பு. புலவர் மணி குகஸ்ரீ ரசபதி அவர்களுக்கு நம் நன்றியும் பாராட்டும் உரியன. இந்நூல், முருகப்பெருமான் அருளை வேண்டுவாருக்குப் பெரிதும் பயன்படும்.

இந்நூலை வெளியிட முன் வந்து உதவியவர்கள், சென்னை ஸ்ரீ பாலசுப்பிரமணியம் கம்பெனியார் அவர்கள். திருப்பதி, பழனி, திருச்செந்தூர், இராமேஸ்வரம், கன்னியாகுமரி, மதுரை முதலிய பல தலங்களில் இறைவன் திருமுன்பு வெள்ளி விளக்குகளை ஏற்றிவைத்து, அவைகள் எப்போதும் சுடர் விட்டெரியவும் வகை செய்திருக்கும் இவர்கள் திருத்தொண்டினைச் சைவ உலகம் பாராட்டக் கடமைப் பட்டுள்ளது. இன்னும் பல துறையிலும் இறைபணி யாற்றி வரும் இக்கம்பெனியார், ஆண்டுதோறும் கந்தசஷ்டிவிழாவை ஒட்டி முருகன் பாமாலைகளைத் தொகுத்துப்பழனியாண்டவன் பெயரால் வெளியிட்டு, அதனின்றும் வரும் தொகையிலிருந்து மீண்டும் பலவகைப் பக்திப் பாடல்களை வெளியிட்டு வருகின்றனர். இந்த ஆண்டு பிள்ளைத் தமிழ்த் திரட்டு ஒன்றை வெளியிடலா மென்று அடியேன் கூறிய யோசனையை அன்புடன் ஏற்று, இவ்வருட் பணியை குகஸ்ரீ ரசபதியவர்கள் முயற்சியால் தொகுத்து,

அன்னாரின் அரிய குறிப்புரையும், ஆசிரியர் வரலாறு, தல வரலாறுகளுடன் வெளியிட்ட அக் கம்பெனியார்க்கு நாமென்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளோம். இவர்கள் தொண்டு நிலேத்துத் திகழ்ந்து மக்கட்கு மென்மேலும் பயன்படுமாறு இறைவன் அருள் புரிவாராக.

"ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும் வாயெல்லாஞ் செயல்".

இந்நூலின் துணைகொண்டு, 'வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும் தாழ்த்த சென்னியும் தந்த தலைவனை' வணங்கித் துதித்து, அவன் திருவருட் பேற்றிற்கு உரியராகி உய்தி பெறுவோமாக.

அ. உத்தண்டராமன்,
12—10—57.

---

# 1. திருவிரிஞ்சை:

இது, தொண்டை நாட்டுத் தலம். காட்பாடிப் புகை வண்டி நிலயத்தில் இருந்து 8 மைல்; விரிஞ்சிபுரம் ஸ்டேஷனி லிருந்து 3 மைல் கரபுரம், கரபுரி என்றும் இத்தலத்திற்குப் பெயர் உளது.

எம்பெருமான் திருமுடி எட்டவில்லையே என்று வருந் திய அந்தணச் சிறுவர்க்கு, வீணை கவலை வேண்டா; அன்புள நீ அபிஷேகம் செய் என்று, தன் வணங்காத் திரு முடியைச் சிவபிரான் வணக்கி நின்ற பதி இது.

சிறக்க சாவித்திரர் சேவிக்க, கண்ணுதல் இறைவர் கயிலாயத்தை அவர்க்குக் காட்டிக் கொடுத்த தலம் இது.

வணிக பக்தர் ஒருவர்க்கு, அமலர் இங்கிருந்து வழித் துணை யாகி வந்தார். இப்படி யெல்லாம் புனித தலபுராணம் புகல்கிறது.

திருமுருகனுக்கு, இங்கு தனித் திருக்கோயில் உளது. தெய்வக் கம்பீரத் திருவுருவம். இங்கு முருகனை உபாசித்து உயர்ந்தோர் பலர். அவர்களுள் ஒருவர், **வரகவி ஸ்ரீ மார்க்க சகாய தேவர்.**

ஆடிப் பூரத்தன்று, அங்கு மரகதாம்பிகை வழிபாடு நடைபெறும். அன்று இரவில் தேவியை, ஆத்தே ஆத்தே என்று குரல் கொடுத்தானும் நம் ஆறுமுகப் பெருமான்.

வழித்துணை நாதர் ஆண்டு விழா நிகழ்பொழுது, மார்க்க சகாயரை, ஐயா ஐயா என்று கூவி யழைத்ததாம் குமரவேள்.

திருவோண புண்ணிய தினத்து இரவில், அம்மான் அம்மான் என்று, திருமாலை ஆர்வம் காட்டி விளித்தானும் நம் அத்தன். இப்படி அற்புதமாக அழைத்த ஒலிகளை, அத்தலத்தில் தங்கி அயில் மயில் இறையை ஆராதித் திருந்த அன்புத்தேவர் செவிமடுத்து, இன்புற்றுப் பாடியது இத் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் என்று பேசுகின்றூர் பெரியோர்.

## 2. திருப்பரங்குன்றம்.

இப்பதி, மதுரைக்குத் தென்மேற்கில் 4 மைல் தூரத்தில் இருக்கிறது. இது ஆறுபடை வீடுகளுள் முதலது. தேவயானையார் திருமணம், நியதி பெற இங்கு நிகழ்ந்தது.

"யாம் இரப்பவை,
பொன்னும் பொருளும் போகமும் அல்ல ;
அருளும் அன்பும் அறனும் என்றிவை"

என்று, வானவரும் தானவரும் கானவரும் பிறரும், அர்ச்சித்தல், நிவேதித்தல், இசைபாடல் செய்து, வந்து வந்து இங்கு நாளும் வழிபடுகின்றனர்.

கண்ணிறைந்த கணவர் வாய்ப்ப, நன்மகப் பேறு சித்திக்க, வீரமணாளர்க்கு வென்றி விளைய ஆராதிக்கின்றூர் அரிவையர்.

முருகன்மேல், அவன் ஊர்தியான மயில் யானைகள் மேல், செம்மைக் கொடியான சேவல் மேல், வெற்றி வேலின் மேல், ஆணை யிடுவது கூடாது என்று, அணங்கனுர் ஆடவர்க்கு அறிவுறுத்தும் அருமைத் தலம் இது.

சங்க நாதம் செய்யும் சங்க நூற்களுள், எட்டுத் தொகையில் ஒன்றுன பரிபாடல், திருப்பரங் குன்றத்தின் பெருமையை இப்படி யெல்லாம் தெரிவிக்கின்றது.

இங்கு எழுந்தருளிய குமரன்மேல், மு. ரா. அருணசல கவிராயர் பாடிய பிள்ளைத் தமிழ், உள்ளம் அள்ளும் இயற்கை வருணனையும், சொற்செறிவும், ஆழமான அரும் பொருளும் அமைந்தது.

## 3. திருச்செந்தூர்

இது இரண்டாவது படைவீடு. சீரலைவாய், செந்தில், செயந்திபுரம், கந்தமாதனம், சந்தனசலம் என்ற பெயர்களும் இதற்கு உண்டு. இங்கு, விமல உற்சவர்க்கு விசேடமகிமை. அவரை ஒரு காலத்தில் டச்சுக்காரர் எடுத்துச் சென்றனர். மோதியது பெரும் புயல். நீரில் சென்ற கப்பல் நிலை

குலேந்தது. இவரை எடுத்து வந்தது பிழையோ என்று எண்ணம் பிறந்தது.

அதனல், கப்பலில் இருந்த மூர்த்தியைக் கடலில் இட்டனர். அதன் பின் புயலும் அடங்கியது. உயிர் பிழைத்தோம் என்று அவர்கள் ஓடினர்.

எங்கே உற்சவர் ? இனிய தரிசனத்தை இழந்தோம் என்று, பதறிக் கதறினர் பக்த கோடிகள். உணவை மறந்தனர் ; உறக்கம் துறந்தனர் ; எங்கும் அழுகுரல் எழுந்தது.

குலசேகர பட்டினத்தில் அருந்தவர் ஒருவர் இருந்தார். கந்தப் பெருமான், தான் இருக்கும் இடத்தை, அவர்க்குக் கனவில் அருளினன். வித்தகர் அவர் விரைந்தார். குறித்த இடம் சென்றார். கடவுள் பெருமானைக் கண்டார். எடுத்தார். எடுப்பான மரக்கலத்தில் ஏற்றினர். ஏத்தித் தொழுதார். சாந்தி நிலயமான சந்நிதியில், வரத சண்முகத்தை வைத்தார்.

கண்ட அடியவர், இன்பக் கண்மழை பொழிந்தனர். கை தலைமேல் ஏற, களி நடமாடினர். அருமையாக நடந்தது ஆராதனை,

நலம் சிறந்த சிவத்திற்கு, புருஷ கோலம் கொண்ட நான், நான்காவது சக்தி. எமது திருமுகம் ஒன்று, சிவனர் திருமுகம் ஐந்து ; ஆக முகம் ஆறு.

எமது திருக்கரம் நான்கு ; எம்மான் திருக்கரங்கள் எட்டு ; ஆக, பயனுன திருக்கரங்கள் பன்னிரண்டு. எமது ஆழியும், எம்பிரான் சூலமும் ஒன்றித்த திருவுருவே திருக்கை வேல்.

எம் இடது கண் வழிவந்தார் தேவயானையார் ; வரத சிவ வலக்கண் வழி வந்தார் வள்ளியார் ; இவ்விருவருமே தெய்வ முருகனது தேவியர்.

யாவரும் வந்திக்கும் சிவமும் யாமும், பிராமணியம். நாங்கள் இருவரும், அவ் ஓங்காரன் திருவுருவில் ஒன்றி யிருத்தலின், அவன் சுப்பிரமணியன் ஆகிருன்.

நான் நிலம் ; சிவம் மலை ; இந்த இரு நிலையும், கந்தமாதனப் பெயரால் இன்பச் செந்திலில் இருக்கிறது என்று,

திருமால் நாரதர்க்குக் கூறியதாக, வடநூல் ஒன்று, அரிய பல நுட்பங்களை அறிவிக்கின்றது.

திரிசுதந்தரர் வழிபாட்டை யேற்ற தெய்வச் செந்தில் கந்தனை, உபாசித்து உய்ந்தவர்கள் பலர். பயன்பெற்ற அவர்களுள் ஒருவர், பகழிக்கூத்தர்.

இவர் வைஷ்ணவர். அவருடைய தீரா வயிற்று நோய், திருச்செந்தில் பிள்ளைத்தமிழ் பாடியதும் தீர்ந்தது. இதற்குச் சன்மானம் இது என்று, தன் திருமார்பில் இருந்த மாணிக்கப் பதக்கத்தை முருகன் வழங்கினன். இப் பிள்ளைத் தமிழை, செந்திலில் இன்றும் வழிபாட்டுக் காலத்தில், ஓதுவார்கள் உள்ளம் உருகி ஓதுகின்றனர்.

## 4. பழனி.

இது, பயன்தரும் மூன்ருவது படைவீடு. வயல்வளம் உடைய தலம். இதற்கு, சிவமலை, சித்தன் வாழ்வு எனும் சிறந்த பெயர்கள் பலவுள. பொதினி எனும் புனிதத் திருநாமம், பழனியெனத் திரிந்தது என்று அரிது கூறுகின்ருர் ஆய்வாளர்.

தெய்வங்கட்குள் ஞானப் பழமான தெய்வம், இனிய பழனி மலைமேல் எழுந்தருளி யிருக்கிறது. பழனியும் பஞ்சாமிர்தமும், என்றும் சேர்த்து எண்ணப் பெறும்.

குராமர அடியிற் கோயில் கொண்டான். வையாபுரி அன்பர்க்கு வாழ்வு தந்தான். இடும்பன் இடும்பிக்கு, பரம் அருளைப் பாலித்தான். நித்திய நாதர், பிரமேந்திரர் முதலினோர்க்கு நிழல் தந்தான். சுவண குத்தர்க்குப் புத்திர சுகம் உதவினன். வசுமந்தர்க்கு, மாலோனும் வேலோனுமாக, மாறி மாறிக் காட்சி வழங்கினன். அகத்தியர் போகர் முதலினர்க்கு அருள் தந்தான். பழனித் தல புராணத்தை, மூன்றே நாளிற் பாடும்படி, வென்றி மாலைக் கவிராயர்க்கு விருதளித்தான். அருணகிரி நாதர்க்கு, அகத்தும் புறத்தும் அனுபவமானன். சேரமான் பெருமாட்குச் சேவை தந்தான். கண்ணிலாத மாம்பழக் கவிக்கு, அகக் கண் அளித்தான். மாதுளம் பழத்தின் மூலம்; அகில உலகையும்

ஒரு நொடியில் வலம் வர இயலுமெனலை உணர்த்தினன். ஒரு பற்றும் இலாதவர்க்கு, உயர்கின்றது வாழ்வு என்பதை, முண்டிதமாகி, கோவணமும் யோகதண்டும் கொண்டு, உயரிய பல குறிப்புகளை உணர்த்துகின்றான்.

இப்படி யெல்லாம், பழனியாண்டவர் செய்யும் செயல்களை, அருள் நூற்கள் பல அறிவிக்கின்றன.

ஐந்தறிவும் ஒருமையுற, பயன் தரும் தத்துவப் படியேறி, மாபெரும் ஆதார மண்டபத்தில் தங்கி, அமைதி பொங்கி, ஏகாந்த வெளிக்கு வருக! வருக என்று ஈர்த்து, முதன்மை இன்ப அருவியில் முழுக்காட்ட, உச்சியேறி யிருக்கின்ற முதல்வன், பழனி யாண்டவன் ஆன பரன்.

இப்பெருமானை, இடையறாது உணரும் பெருமையாளர், வண்ணச் சரபம் முருகதாசர் எனும் திருப்புகழ்த் தண்டபாணி ஸ்வாமிகள். இவர், திருநெல்வேலியில் தோன்றி, திரு ஆமாத்தூரில் ஞான சமாதி கொண்டவர்; இவர் செய்துள நூற்கள் அளவிறந்தன.

பயன் உணர்ந்து சுவாமிகள் பாடியது பழனிப் பிரபந்தம். அதனுள் ஒரு பகுதி, பழனிப் பிள்ளைத் தமிழ். ஒவ்வொன்றும் அருமையான பாடல்கள். சொற்களின் அருமை, பிரயோக விவேகம், பொருளாழம் முதலியன, புனித இவர் நூலில் உள்ள புதுமை.

## 5. மயூரகிரி.

இத்தலம் இராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர்க்குக் கிழக்கில் 7 மைல் தூரத்தில் இருக்கிறது. இதற்குக் குன்றக்குடி என்றும் பெயருண்டு; குன்றுதோறாடலில் இதுவும் ஒன்று. சிவத்தைச் சேவிக்கத் தேவர்கள் வந்தனர். ஆரவாரித்தன என்று, அவர்கள் ஊர்திகளை அழித்தது மயில். கருணை யற்ற நீ, கல்லாக என்று கந்தப் பெருமான் சபித்தனன்.

மாபெரும் சாபத்தை யேற்ற மயில், சிறக்கப் பலகாலம் தவத்தைச் செய்தது. அருளார்ந்த ஆறுமுகன், அருங்காட்சி யளித்தான். சாபம் தவிர்ந்து, பேறான வாழ்வை

மயில் பெற்றது. இவ்வரலாறு என்றும் எவர்க்கும் நினைவில் இருக்க, குன்று யிருக்கிறேன் அடியேன் ; குமரா ! அதன் மேல், நீ என்றும் குடியாயிரு என்று வேண்டிக் கொண்டது அம்மயில். இணங்கிய பெருமான் அருளிய வண்ணம், மயூரகிரி எனும் அத்தலம், குன்றக்குடி யென்றும் குறிப்பிடப்படும்.

மயூரகிரி சண்முக நாதர் பிள்ளைத் தமிழ் பாடியவர், மழவை - சுப்ரமண்ய பாரதி. இவர் தஞ்சை, சேதுபதி முதலினோரிடம், பெருஞ் செல்வாக்குப் பெற்றவர்.

புத்திரப்பேறு கருதி, இத்தலத்திற்கு வந்தார். பல நாள் மலையை வலம் வந்தார். ஒருநாள், புனித சந்நிதியுள் புகுந்தார். உபவாசம் இருந்தார். பிள்ளை வேண்டுமேல், பிள்ளைத்தமிழ் பாடு என்று அகமுகமான ஒரு அறிவிப்புப் பிறந்தது. அப்படியே அப்படியே என்று அலறினார். பேறு தரும் இப்பிள்ளைத் தமிழைப் பாடினார். அறுமுகவன் திரு முன் அரங்கேற்றினார். அதன் பயனாக, இரு பிள்ளைகளைப் பெற்றார். பக்தர்கள் இதனைப் பாராயணம் செய்து, பாரதியார் கண்ட பயனை, தாமும் இன்று காண்கின்றார்.

பிற பிரதிகளை நம்பி, இதை மயிலாடு துறைப் பிள்ளைத் தமிழ் என்று பதிப்பிக்கப் பட்டது ; பிறகு கிடைத்த பல பிரதிகளில் இது, மயூரகிரிப் பிள்ளைத் தமிழ் என்று அறியப் பெற்றோம். ஆதலின், அன்பர்கள் இதை மயூரகிரிப் பிள்ளைத் தமிழ் என்றே திருத்தி வாசிக்க வேண்டுகிறோம்.

## 6. திருத்தணிகை.

இது, படைவீடுகளில், குன்றுதோருடலைச் சேர்ந்தது. செருத்தணி, உற்பலகிரி, கல்லார கிரி எனவும் பெயர் பெறும். அமைதி தரும் அருமைத் தலம். “புவிக்கு உயிராகும் திருத்தணி” என்றும்,

“பலகாலும் உனைத்தொழு வோர்கள்
மறவாமல் திருப்புகழ் கூறி
படிமீது துதித்துடன் வாழ அருள் வேளே”

என்றும், என்றோ பாடிய திருப்புகழ் அனுபவம், இங்கு இன்றும் நிகழக் காண்கிறோம்.

ஸ்ரீவள்ளி தேவயானையாருடன், சண்முகப் பெருமான் இங்கு சாந்த மூர்த்தியாக எழுந்தருளியிருக்கிறார். பரம குமரனை இங்கு வழிபட்டு உய்ந்தவர்கள் பலர். அவர்களுள் ஒருவர் ஸ்ரீ கந்தப்ப தேசிகர்.

இவர் சிவஞான முனிவரின் மாணவரான கச்சியப்பரிடம் கற்றவர்; விசாகப் பெருமாளையா, சரவணப் பெருமாள் ஐயர் என்பவர்தம் தந்தை. இவர் செய்த நூற்கள் பல. அவைகளுள் ஒன்று, திருத்தணிகைச் சந்நிதி முறை. அதனுள் ஒரு பகுதி, திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ். இது அருமையான இலக்கியம். நினைக்கத் தக்க செய்திகள இதனில் நிறைந்திருக்கின்றன.

## 7. வைத்தீசுவரன் கோயில்.

இது ரயிலடிக்கு அண்மையில் இருக்கிறது. சீகாழிக்குத் தென்மேற்கில் 3½ மைலில் உளது இப்பதி. புள்ளிருக்கு வேளூர் என்றும் இதற்குப் பெயருண்டு. இங்குள முத்துக்குமாரசுவாமி திருவுருவம், காணத்தக்க கவினுடையது.

பாண்டிநாட்டு ஸ்ரீ வைகுண்ட கயிலாயத்தில் பிறக்கும் போதே ஊமையாய்ப் பிறந்து, திருச்செந்தில் முருகன் அருளால் பேசும் திறன்பெற்று, கந்தர் கலிவெண்பா மீனாட்சிப் பிள்ளைத்தமிழ் முதலிய பல பிரபந்தம் பாடி, தருமபுர ஆதீனம் ஸ்ரீ மாசிலாமணித் தேசிகரிடம் தீட்சை பெற்று, காசிமடம் அமைத்த கருணையாளர், ஸ்ரீ குமரகுருபர ஸ்வாமிகள்.

அவர் ஒரு சமயம், வைத்தீசுவரன் கோயிலுக்கு வந்தார். செவ்வேள் குமரனைச் சேவித்தார். தாய்க்குப் பிள்ளைத் தமிழ் பாடினை; குமர குருபரா! சேய்க்குப் பாடாதது ஏன் என்று, வேலிறைவன், ஆவேசகர் மூலம் வினவினன்.

உவகை மிகுந்த அந்நிலையில், பிறந்தது இப் பிள்ளைத் தமிழ். மணம் கமழ் தெய்வத்து இளநலம் காட்டுவன் மயிலிறைவன். அவனது அருள் நல ஆக்கங்களை, அருமை நடையில் அறிவிக்கிறது இந்த அருள் நூல்.

## 8. சேயூர்.

இது, செய்யூர் எனவும் வழங்கும்; மதுராந்தகத்திற்குக் கிழக்கே 16 மைல் தூரத்தில் உளது. இங்கு உள்ளம் அள்ளும் முருகன் திருவுரு. இப்பெருமானை அனுபவித்த வர், அந்தகக்கவி வீரராகவ முதலியார். இவர், காஞ்சிபுரத் திற்கு அருகில் உள்ள பூதலூரில் பிறந்தவர். இலங்கை பரராச சேகரனிடம் பரிசு பெற்றவர். செய்த நூல்கள் பல. அவைகளுள் ஒன்று சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ். ஒவ்வொரு பாடலும் அன்பு குதிபோடும் அருமை நடை.

## 9. திருப்போரூர்.

இது தொண்டை நாட்டுத் தலம். சென்னையிலிருந்து 26 மைல். இத்தல மூர்த்தி மிக அருமையானது. காணத் தக்க கம்பீரமான திருவுருவம். பலதரம் சிலமான இத்தலம், ஸ்ரீ சிதம்பரஸ்வாமிகள் காலத்தில் ஜீரணோத்தாரணமானது. இத்தலத்திற்கு ஒரு பிரபந்தம் உண்டு; அதைச் செய்தவர் ஸ்ரீ சிதம்பரஸ்வாமிகள். பிரபந்தத்தின் ஒரு பகுதி, பிள்ளைத்தமிழ். வேத ஆகம சாரமான செய்திகள் பலவற்றை, கவிநலம் மிக்க இப் பிள்ளைத் தமிழிற் காணலாம்.

## 10. திருமலை.

இத் திருப்பதி, செங்கோட்டையை அடுத்து இருக் கிறது; தென் காசி வட்டத்தைச் சேர்ந்த பண்புழி எனும் ஊரில் உளது. பண்பை நகர் என்பது ஆதியில் இருந்த பெயர். ஊர் பேர் பண்புழி; கோயில் பெயர் திருமலை; குன்றின் மேல் உள்ள கோயில்; அற்புதமான மூர்த்தம். இங்கு வீற்றிருக்கும் முருகன் திருவுருவை எண்ணி யுருகிய வர், ஸ்ரீ கவிராஜ பண்டாரத்தையா என்பவர். இலஞ்சிப் பிள்ளைத் தமிழ் பாடிய தம் திருவாயால், திருமலை முருகன் பிள்ளைத் தமிழும் பாடியுளர். இவர் 75 ஆண்டுகட்கு முன் இருந்த வர். கல்லான மனத்தையும் கனிவிக்கும் இவர் கவிவளம்.

# செய்யுள் முதற்குறிப்பு.

உ

முருகன் துணை

# 1. காப்புப் பருவம்

(மார்க்க சகாயர் அருளிய)

# திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்

---

[திருமால் முதலினோர் சேயைக் காப்பாராக என்று, இரண்டாம் திங்களில் வேண்டும் பருவம் இது.]

திருவருள்

1. [1]திருக்கஞ்ச இருகரத்தின் [2]அபயவர தமும்சேர்
திகழும் [3]மரகதம் அளித்த தெய்வசிகா மணியை,
[4]அருக்கன் சந்திரன் தவழும் [5]புரிசை [6]விரிஞ்சையில் வாழ்
ஆறுமுகத்(து) அரசை, எமை ஆண்டவனைப் புரக்க ;
பெருக்கம் சந்ததம் மேவும் [7]சிவநாதன் இடத்தில்
பிறந்த ஒரு [8]சிறுபாலன் [9]பெருங்காணி பெறவே,
[10]இருக்கஞ்சன் முதல் அமரர் அரகர என்(று) ஏத்த
இளைத்த பிறை சூடுமுடி [11]வளைத்த திருவருளே

*(1) திருக்கஞ்சம் - அழகிய தாமரை (போன்ற). (2) அபயம் - அச்சம் அகற்றும்; வரதம் - அருளல் செய்யும்; இப்படி இருந்த கரம் இரண்டு என்றபடி. (3) மரகதம் - மரகதாம்பிகை. (4) அருக்கன் - சூரியன். (5) புரிசை - மதில் (சூழ்ந்த). (6) விரிஞ்சை என்பது ஸ்தலப் பெயர். (7) சிவநாதன் என்பது ஆதிசைவ வேதியர் ஒருவர் பெயர். (8) சிறுபாலன் - ஐந்து வயதுடைய சிவசர்மா. (9) பெருங்காணி - மான்ய நிலம். (10) இருக்கஞ்சன் - சிறந்த தாமரைமேல் வீற்றிருக்கும் பிரமதேவர். (11) முடி வளைத்த என்பது, அபிஷேகம் செய்ய எட்டவில்லையே திருமுடி என்று ஏங்கிய பாலனுக்கு இரங்கி, எட்டும்படி தன் திருமுடி சாய்த்துக் கொடுத்த திருவிளையாடலைக் குறித்தது.* (1)

## திருநீறு

### வேறு சந்தம்

2. முடியா றுடையாய் ! குமரா ! சிவமோட் சத்தேற்றும்
முருகா ! அசுரே சர்களா கியகாட் டைப்[1]பாற்றும்
முனைவா ! கருணு கரனே ! மறைவாக் கில்சாற்றும்
முடியா முதலே ! [2]தளை ஓ [3]திமனூர்க் குப்பூட்டும்
அடியார் துணையே ! அவர்பால் விளையாட் டைக்காட்டும்
அமுதே ! கனியே ! [4]நறவே ! [5]முருகாற் றைக்கேட்கும்
அரசே ! எமதா ருயிரே ! எமைஊத் [6]தைக்கூட் டில்
அடையா நெறிநீ அருள்வா யெனவாழ்த் திப்போற்றி,
விடியா [7]மலமா யைகளாம் இருள்தீர்த் துத்தீர்த்து,
விழிநீர் தருயோ கிகள்சேர் தருவீட் டுக்கேற்ற
[8]வெளிரு அமுதாய், உலகோர் இடர்நீக் கப்பாட்டு
மிகஓ தமுனுள்[9] ஒருநே யன்உள் நாக் கில்தீட்டும்
வடிவே லுடனே, வயல்சூழ் [10]கரனூர்க் குள்தோற்றும்
மயிலே றியசேய், சிறுவாள் [11]நுதல்மேல், [12]போன்பூத்த
[13]மலைமான் முலையூ றியபா லொடுகூட் டிச்சாத்தும்
[14]வளைபோல், மதிபோல் ஒளிசேர் திருநீற் றுக்காப்பே.

(1) பாற்றும் - அழிக்கும். (2) தளை - விலங்கு. (3) ஓதிமனூர்க்கு - ஓதிமம் எனும் அன்னத்தை வாகனமாக வுடைய பிரமனுக்கு; வேதம் ஓதும் பிரமனுக்கு எனினு மாம். (4) நறவே - தேனே. (5) முருகாற்றை - திரு முரு காற்றுப் படையை. (6) ஊத்தைக் கூட்டில் - அழுக்குப் பொதிந்த கூடான உடம்பில்; "பீளையும் நீரும் புறப்படும் ஒரு பொறி; மீளும் குறும்பி வெளிப்படும் ஒரு பொறி; சளியும் நீரும் தவழும் ஒரு பொறி; உமிழ்நீர்க் கோழை ஒழுகும் ஒரு பொறி; வளியும் மலமும் வழங்கும் ஒரு பொறி; சலமும் சீயும் சரியும் ஒரு வழி; உள்ளூறத் தொடங்கி வெளிப்பட நாறும்" எனவரும் பட்டினத்தார்

பாடல் இங்கு எண்ணத்தகும்; ஊத்தைக் காட்டில் என்றும் பாடம் உண்டு. (7) மலம் - ஆணவம். (8) வெளிறு - கெடாத. (9) ஒரு நேயன் - அருணகிரிநாதர். (10) கரன் எனும் அவுணன் வழிபட்டுப் பேறு பெற்றதால், விரிஞ் சைக்குக் கரனூர் என்று ஒரு பெயர் உண்டு. (11) வாள் - ஒளி. (12) பொன் - அழகு; பொன்போல் திருநீறு மலர்ந்த எனினுமாம். (13) மலைமான் - பார்வதி. (14) வளை - காப்பு. திருவருள், எம்மை ஆண்டவனைப் புரக்க என முடிவு காண்க. புரக்க என்பது, தான் காப்படைய, திருவிரிஞ்சை முருகன் முன் திருநீறு, காவல் பணியாற்றுவதாக என்றபடி. காப்புப் பருவம் முழுதும் இப்படியே பொருள் காணப் பெறும். (2)

மார்க்க சகாயர்

வேறு சந்தம்

3. [1]சீரியவே லாயுதனைச், செவ்வேளைக், குகனை,
தேவர்கள்சே னுபதியைத், திருமயில்வா கனனைக்,
காரியகா ரணம்கடந்த கடவுளை, எம் கோனைக்,
கரபுரியில் ஆறுமுகச் சேவகனைக் காக்க;
[2]கூரியகுந் தளதேசத் [3]தனபாலன் மகிழக்
குளிர்பிறையும், சடைமுடியும் மழுமானும், பணியும்,
[4]வாரியிருள் கடுமிடறும், [5]நுதல்விழியும் மறைந்தே
[6]மறைப்புரியில் வழித்துணையாய் வந்தருள்சே [7]வகனே!

(1) சீரிய - சிறந்த. (2) கூரிய - கூர்மை அறிவு கொண்ட. (3) தனபாலன்-மிளகுவியாபாரியான ஒரு பக்தன். (4) வாரி யிருள் கடு மிடறும் - கடலில் எழுந்து இருண்ட அதிபயங்கர விடம் உண்ட திருநீலகண்டமும். (5) நுதல் விழியும் - நெற்றிக் கண்ணும். (6) மறைப் புரியில் – வேதம் பூசித்த விரிஞ்சைப் பதியில். (7) சேவகனே - வீரனே

*இது, மிளகு வியாபாரியான தனபாலச் செட்டிக்குக் காப்பாக, வீரன் உருவில் வேதக் குதிரைமேல் வழித்துணை வந்த திரு விளையாடல். வழித்துணையாய் வந்தருள் சேவகன், ஆறுமுகச் சேவகனைக் காக்க என்றபடி.* (3)

மரகதாம்பிகை

4. வேறு சந்தம்

[1]அரவின் மணிகளும், [2]அருண கிரணமும் அழிய ஒளிவிடு [3]தோற்றனை ;
அழகு பொழிதரும் இளைய குமரனை ; அசுர ரொடுபொரு சீற்றனை ;
[4]அயனும்மலைவுறும்மறையின் இறுதியை,அமுதமொழிகொடு[5]தேற்றனை ;
அடிமை படுமவர் கொடுமை பொடிபட, முடுகி எழும்அருள் ஊற்றனை ;
[6]விரவி அளியினம் முரல, நறவுறு குவளை மலர்கமழ் [7]நாற்றனை ;
[8]விழிகள் ஒருபதொ(டு) உபயம் உடையனை ; [9]மிருகமதம் [10]அகில் [சேற்றனை
விருது பெறுகரு [11]தலர்கள் உடலுயிர், [12]விடுதி பெற[13]அடு கூற்றனை
[14]விபுதர் புகழ்கர புரியில் வரும்அறு முகனை ; அணிதிரு நீற்றனை ;
[15]இரவி மதிஅழல் நயனி, [16]பரிபுர சரணி, கௌரி, சடாட்சரி,
இறைவி, திரிபுர தகனி, முனிவர்கள் இதய மலரை [17]விடாக்கிளி ;
எழுக டலும்எழு புவியும்அருளியும், இளமை நலம்அழி யாக்குயில்,
இழிஞர் தொழிலது புரியும் அறிவிலர், இடர்கள் இடிய அராப்பிடி,
[18]வரையில் உறைபவள், கருணை மழைபொழி [19]வதனி, [20]சடிலி, [[21]மகோத்தமி,
[22]வடுகி, பகவதி, குமரி, சிவனிடம் மருவி, [23]நிறையக லாத்திரு ;
[24]வனச மலர்மகள், சகல கலைமகள் வழிய டிமைவினை தீர்ப்பவள் ;
மலையின் மடமகள், [25]வருண [26]மரகத வலி[27]அமலி யவள் காக்கவே.

(1) *அரவின் மணிகளும்* - *பாம்புகள் உமிழ்த்த மாணிக்கங்களும்.* (2) *அருண கிரணமும்* - *செந்நிறமான சூரியனுடைய ஒளிக் கற்றைகளும்.* (3) *தோற்றனை* - *தோற்றம் உள்ளவனை.* (4) *அயனும்* - *பிரமனும்.*

(5) தேற்றனை - தெளிவித்தவனை. (6) அளி இனம் விரவி முரல - வண்டுக் கூட்டங்கள் மொய்த்து ஒலிக்க. (7) நாற்றனை — மணம் கமழ இருந்தவனை. (8) விழிகள் ஒருபதொடு உபயம் - பத்தும் இரண்டுமான பன்னிரு கண்கள். (9) மிருகமதம் - கஸ்தூரி. (10) அகில் சேற்றனை - அகில் குழம்பு பூசிய மேனியனை. (11) கருதலர்கள் - பகைவர்கள். (12) விடுதிபெற - நீங்க. (13) அடு - மோதிய. (14) விபுதர் - தேவர்கள். (15) இரவிமதி அழல் நயனி - சூரிய சந்திர அக்கினியாம் மூன்று கண்களையுடையவள். (16) பரிபுர சரணி - சிலம்பணிந்த திருவடிகளை யுடையவள். (17) விடாக்கினி - அகலாத ஞானக்கினி மயமானவள்; விடாக்கிளி என்றும் பாடம். (18) வரையில் உறைபவள் - பர்வதத்தில் உறையும் பார்வதி. (19) வதனி - திருமுகத்தினள். (20) சடிலி - ஜடையை யுடையவள். (21) மகோத்தமி - மகத்தான உத்தமி. (22) வடுகி - துர்க்கை சொரூபி. (23) நிறை - பத்தினித் தருமம். (24) வனச மலர்மகள் - தாமரை மேலுள்ள திருமகள். (25) வருணம் - சிறந்த. (26) மரகதவலி - மரகத வல்லி. (27) அமலி - களங்கம் இலாதவள். (4)

கங்கை

வேறு சந்தம்

5. எம்பா தகம்நீக் கியவே லவனை,
இமையோர் அரசைக், குமரேசனை, என்
இதயத்(து) இருளைக் களையும் குகனை,
அம்பால் மொழிஅம் மையளித் தருளும்
அமுதைக், கனியைக், கரனூர் தனில்வாழ்
அடியார் பெருவாழ்வை, அளித்தருள்க;
கம்பா நதி,கோ தமை,கா வேரி,
[1]காளிந்தி, கோதா விரி[2]பா லிநதி
[3]கனகா நதி,கண் டிகை,குண் டிகை,சூழ்

பம்பா நதி,வா [4]னதி,சீ தைநதி,
பாஞ்சா லி,தபோ நதியே முதலாம்
பலவாம் நதியா னபகீ ரதியே

*(1) காளிந்தி-யமுனை. (2) பாலிநதி-பாலாறு. (3) கனகாநதி - பொன்முகரி; இது காளத்தியில் பாயும் நதி. (4) வானதி-ஆகாய கங்கை; இப்பாட்டில் கங்கையின் அம்சமான நதிகளைக் குறிப்பிட்டு, முதலாம் பலவான என்றமையின், அம்ச நதிகள் இன்னும் பலவுள எனலை ஓர்க.* (5)

கணபதி

வேறு சந்தம்

6. முந்திவரு சூரர்இனம், மாளச் சிவந்தவனை ;
முன்புகடல் நீர்[1]சுவற, வேல்[2]தொட்ட [3]செங்கையனை ;
[4]முண்டகனை நூல்வினவி, வாதித்த [5]புங்கவனை ;
[6]மொய்ம்புபெற வேதொழுத, கீரற்(கு) இரங்கினனை ;
எந்தையை, என் ஆவியை, என் ஆவிக் (கு) அருந்துணையை,
என்சிரசில் [7]ஓலமிடு பாதச் சதங்கையனை ;
இன்பமுரு கேசனை; மெய்ஞ் ஞானக் கொழுங்கனியை ;
எங்கள்கரன் ஊரில்,மயி லோனைப் புரந்தருள்க ;
[8]அந்தரம் எலாம்அதிர வாய்விட்டு, [9]மண்டிவரும்
[10]அஞ்சலர் எலாம்[11]முறிய வால்சுற்றி; [12]மஞ்சுதனை
அங்கைகொடு தாவி,அதன் நீரைப் பிழிந்து, கடல்
அம்புவி யெலாம்நெளிய ஓடித் திரும்பிவிட,
[13]மந்தரம் எலாம் அசைய வேமுட்டி, அங்குலவு
[14]வன்பரிதி தேர்முறிய வேகுத்தி, வெண்தரளம்[15]
வந்துலவும் [16]ஏழ்சலதி நீர்வற்ற உண்டுமிழும்
[17]வண்டுகள் மதாசலம தாய்,உற் றிருந்தவனே !

*(1) சுவற-வற்ற. (2) தொட்ட-ஏவிய. (3) செங்கையனை - உக்ர குமார பாண்டியராக அவதரித்தவனை. (4) முண்டகனை-*

பிரமனை. (5) புங்கவனை - மிடுக்குடையவனை. (6) மொய்ம்பு - (கற்கிமுகி பூதத்தினிடம் இருந்து தப்பும்) ஆற்றல். (7) ஓலம் இடு - ஒலிக்கின்ற. (8) அந்தரம் - ஆகாயம்; உலகம் எனினுமாம். (9) மண்டி - மொய்த்து. (10) அஞ்சலர் - பயம் கண்டறியாத பகைவர்கள். (11) முறிய-சிதைவுபட்டு அழிய. (12) மஞ்சுதனை-மேகங்களை. (13) மந்தரம் முதலிய எண்திசை மலைகள். (14) பரிதி - சூரியன். (15) தரளம் - முத்துகள். (16) ஏழ் சலதி – ஏழு கடல்கள். (17) வண்டுகள் மதா சலம் - (வேத) வண்டுகள் மொய்க்கும் மத வெள்ளமாக; மதாசலமதாய் உற்று இருந்தவன், மயிலோனைப் புரந்தருள்க எனக் கூட்டுக. (6)

வைரவர்

வேறு சந்தம்

7. ஒருகைமணி, ஒருகை கயி(று,) ஒருகைசரம்[1], ஒருகை சிலை,
ஒருகைகடம், [2]ஒருகை வடிவாள்,
பொருகழுமுள் [3]ஒருகை,சிரம் ஒருகை,இவை யுடையகர
புரிவடுகன் [4]அடிதுதி செய்வாம்;
முருகை,அரி மருகை,மயில் முனியை,மறை முதலை,அறு
முகனை,உமை மகனை,அடியார்
இருள் அகல வருகுகனை, எமையடிமை கொளும்அரசை,
இனிமையொடு [5]புரவு செயவே.

(1) சரம் - கணை. (2) கடம் - கமண்டலம்; ஒருவகைப் படையுமாம். (3) கழுமுள் - ஒருவகை ஆயுதம். (4) வடுகன் - வைரவன். (5) புரவு-காப்பு. வடுகன் புரவுசெய்க என்றபடி. (7)

திருவேல்

வேறு சந்தம்

8. முடிபொர் ஆறுடை யானை,எம் ஐயனை,
முதல்வனைச், செவ்வேளைப்,
[1]படியெ லாம்புகழ் தேவனை, விரிஞ்சையம்
பதிமுரு கனைக்காக்க ;
கொடிய [2]தானவர் குருதியில் ஆடி,வெம்
குடலெனும் [3]தொடை சூடி,
[4]நெடிய யாக்கையின் [5]நிணமெலாம் அருந்திய
அவன் கையின் நெடுவேலே !

*(1) படி எலாம் - எவ்வுலகும். (2) தானவர் குருதியில் ஆடி - அவுணர்தம் உதிர வெள்ளத்தில் மூழ்கி. (3) தொடை - மாலை. (4) நெடிய யாக்கையின் - (அவர்தம்) பெரிய உடல்களின். (5) நிணமெலாம் - கொழுப்பனைத்தும். வேல், முருகனைக் காக்க என்றபடி. (8)*

திருமயில்

9. வேறு சந்தம்

தொண்ட னுக எமைக் கொளும்சிறு தோன்ற லைச்,சதுர் வேதநூல்
சொல்லும் மாமணி வாயனைச்,சுக மாயிருந்து மணம் கொளும்
வண்டு சேர்தரு [1]நீப மாலைய னைத்,திருக் கரன் ஊரில் வாழ்
மரக தக்கொடி பெற்ற செஞ்சுடர் மணியை, அன்பொடு காக்கவே;
அண்ட [2]கூடம் நடுங்க, [3]மால்வரை தூளியாக, அத் தூளியால்
[4]ஆழி ஏழும் நிரம்பி, மேடு படக், [5]கலாபம்அ டித்தெழுந்(து)
எண்தி சாமுக மும்,க டைக்கண் இமைக்கு முன்னம்உ லாவியே,
என்றும் ஆடல் இயற்றி வாழ்,அவன் ஏறு கின்றம [6]யூரமே !

*(1) நீபமாலையனை - கடப்பமலர் மாலை யணிந்தவனை. (2) கூடம் - உச்சி. (3) மால்வரை - மேருமுதலிய மலைகள். (4) ஆழி ஏழும் - ஏழு கடலும். (5) கலாபம் - தோகை ; (6) மயூரம்-மயில். மயூரம் அன்பொடு காக்கவே எனக்கூட்டுக. (9)*

திருமுருகாற்றுப் படையும் திருப்புகழும்

வேறு சந்தம்

10. அம்மைமுலை யுண்டு விளையாடும் இளையோனை, எமை
ஆட்கொண்ட குமரேசனைச்,
செம்மையுள ஆறுமுக னைத்,திரு விரிஞ்சைவரு
சேயைப் புரந்தருள்கவே ;
[1]மும்மைமலம் அகலநக் கீரமுனி சொன்னதிரு
முருகா(று) எனும்[2]தேறலும்,
எம்அருண கிரிநாதர் ஓதுபதி னாரு
யிரம்திருப் புகழ் அமுதுமே !

*(1) மும்மை மலம் - (ஆணவ கன்ம மாயை எனும் மூன்று அழுக்குகள். (2) தேறலும் - தேனும். தேன்போல் இனிப்பது திருமுருகாற்றுப்படை ; அமுது போல்வது அருமைத் திருப்புகழ் எனலை இங்கு ஓர்க.* *(10)*

பலதேவர்கள்

வேறு சந்தம்

11. கந்தனை, வேளை, விரிஞ்சையின் மேவு [1]கடப்பனை, மாதுமையாள்
மைந்தனை, வேலனை, எம்கும ரேசனை, வந்திரு தாள்பணிவார் ;
இந்திரர், வானவர், சந்திர சூரியர், எண்திசை யோர்,முனிவோர்,
[2]செந்திரு மார்பினர், விஞ்சையர், பாதலர், [3]செங்கம லாசனரே !

*(1) கடம்பனை - கடப்ப மாலை யணிந்தோனை. (2) செந்திரு மார்பினர் - திருமால். (3) செங்கமல ஆசனர் - பிரமதேவர். பின் இரண்டடியில் உள்ள மேலோர், பரம குமரன் திருவடிகளைப் பணிகின்றவர் எனலை, முன்னிரண்டு அடிகளில் நினைப்பூட்டிய அருமையே அருமை.* **(11)**

# 2. செங்கீரைப் பருவம்

(அருணாசல கவிராயர் அருளிய)

## திருப்பரங்குன்றம் பிள்ளைத்தமிழ்

[ஒருகால் முடக்கி, ஒருகால் நீட்டி, இரு திருக்கரங்களையும் நிலத்தில் ஊன்றி, தலை நிமிர்த்து, திருமுகம் அசைத்து ஆடும் பருவம் இது, ஐந்தாம் மாதத்தில் நிகழ்வது.]

12. பொன்னுலகில் இந்திரன் முதல்[1] புலவர் அனைவரும்
[2]பொருவறு மகிழ்ச்சி பூப்பப்
போர்அசுரர் வேரறச் செய்து,முன் போல்முடி
புகுந்(து)[3]அரசு புரிய வைத்தாம் !
இன்னும்அவர் யாரையும் [4]விடேம் என்று, [5]மேதையின்
இருங்கர வினைதெரித் தாங்கு,
[6]இவனையும் [7]பொரமேல் [8]எழா(து)உள் [9]இருத்துவாம்
எனநீ இருந்தல் போலப்,
பன்னும்இரு நிலனுற இரண்டுகைத் தலமும்
பதித்(து,)ஒரு முழந்தாளும் அப்
படிபதித்(து,) ஒருமுழந் தாள்நிலை நிறுத்தி,[10]இரு
பாலும் மேலும் பார்த்தல் போல்,
[11]தென்னுலவு திருமுகம் நிமிர்த்தசைத்(து,) அரிமருக !
செங்கீரை ஆடி யருளே !
சிற்பரம் பொருள்அருளும் நல்பரங் கிரிமுருக !
செங்கீரை யாடி யருளே !

(1) புலவர் - தேவர்கள். (2) பொருவு அறு - ஒப்பற்ற. (3) அரசுபுரிய - அரசாள. (4) விடேம் — கைவிடமாட்டேம். (5) மேதையின் இரும் கர வினை தெரித்தாங்கு - (தனது) மேம்பட்ட அறிவிற் சிறந்த திருக்கரச் செயலை உணர்த்துவதுபோல. (6) இவனையும் - (பிள்ளைத் தமிழ்

பாடும்) இந்த அடியவனை என்னையும். (7) பொர (அரிஷாதி தோஷ அவுணர் வந்து) மோத (8) மேல் எழாது - மேல் எழாதபடி. (9) உள் இருத்துவாம் என - இதயத்தில் வைப்பம் என்று. (10) இருபாலும் - இரு புறமும். (11) தென் உலவு - தென் திசை பார்த்த; அல்லது இனிமை விளங்கும் எனினுமாம். (1)

**13.** [1]உலகமா தாஅன்றி, [2]ஓர் ஆறு மாதாவும்
உள்ளம் களித்து, நேரே
உற்றுற்று நோக்கி,[3]எழில் சாலா(து) இதற்கிதென்(று,)
ஒவ்வொரு விதத்தி னும்,சீர்
இலக,முகம் [4]மதியெனக் காணிய [5]உடுக்குலம்
[6]எழீஇ வந்(து) இருத்தல் ஏய்ப்ப,
[7]இட்டவெண் [8]நித்திலச் சுட்டியொடு பட்டமும்,
[9]இளங்கதிர் எறிக்கும் [10]மணிகள்,
பல்கலவும் உயர்செவிப் பொன்குழையும், இளமழப்
பணிகள் பிறவும் [11]திருத்திப்,
பார்ப்பவர்கள் கண்ணெச்சில் வாரா(து) இழைத்த
பரிகார மாக,அணிமண்
திலகநுதல் அழகுதர, ஒளிர்செழும் [12]செங்களிறு
செங்கீரை யாடி யருளே!
[13]சிற்பரம் பொருளருளும் நற்பரங் கிரிமுருக!
செங்கீரை யாடி யருளே!

(1) உலக மாதா - உலக அன்னையான உமாதேவி. (2) ஆறு மாதாவும்—(கார்த்திகை மாதரான)-ஆறு தாயரும். (3) அலங்கரித்துப் பார்த்து, இந்த அணி பொருந்தாது என்று, பலவகையால் மேலும் மேலும் செய்யும் செயற்கைக் கோலம் விளங்க என்றபடி. (4) முகம் மதி யெனக் காணிய - திருமுகத்தைச் சந்திரன் என்று கண்ட. (5) உடுக் குலம் -

*நட்சத்திரங்கள். (6) எழ்இ வந்து இருத்தல் ஏய்ப்ப - புறப் பட்டு வந்து சூழ்ந்து இருத்தலபோல. (7) இட்ட - தரித்த. (8) வெண் நித்திலச் சுட்டியொடு - வெண்ணிற முத்துக் களாலான (நெற்றிச்) சுட்டியுடன். (9) இளம் கதிர் எறிக் கும் - இளம் ஒளி வீசும். (10) மணிகள் பல கலவும் - பல இரத்தினங்களைக் கலந்து அமைத்த. (11) திருத்தி - திருத்தமுற அணிந்து. (12) செங்களிறு - சிறந்த அருள் மத யானையே! (13) சித்பரம் பொருள் அருளும் - பரம் பொருளான சிவனார் அருளிய.* (2)

14. [1]பார்த்திவம் தனில்,அவுண இருள்கிழித்(து) எழுபெரும்[2]
பரிதியென நின்னை யெண்ணிப்,
பன்னிரு செவிக்கணும் பன்னிரு [3]கதிர்க்கடவுள்
பண்ணவர்கள் போன்று, தாமும்
[4]கீர்த்திவந்(து) அணுகாது [5]முன்பட்ட [6]பாடும்,[7]உயர்
கேடும் [8]கிளக்க உறல்போல,
கிளர்செழும் கதிர்மணிக் குழைகள்ஒன் றேடொன்று
கிட்டிக் ; [9]கெழீஇ மகிழ்ச்சி,
பூர்த்திவந்(து) [10]அன்பின் கலந்தெனத் தொட,இரு
புறத்துநின் திருமுகத்தைப்
[11]பொற்புற அசைத்தசைத்(து,) அற்புத மிகத் தாயர்
பூரித்(து,) உளம்க ளிப்பச் ;
[12]சீர்த்திவந்(து) அமர்பெரும் தேவர்சே னதிபதி
செங்கீரை ஆடி யருளே!
சிற்பரம் பொருளருளும் நற்பரங் கிரிமுருக!
செங்கீரை யாடி யருளே!

*(1) பார்த்திவம்தனில் - நிலவுலகில். (2) பெரும் பரிதி என - பெருமையை யுடைய ஞான சூரியன் என்று. (3) கதிர்க் கடவுள் பண்ணவர்கள் போன்று - சூரியர் களாகிய தேவர்கள் போன்று. (4) கீர்த்தி வந்து அணு,*

காது - (வாழ் நாள் முழுதும்) புகழ் வந்து அணுகாதபடி. (5) முன் - முன்னாளில். (6) பட்டபாடும் - (சூரபதுமன், இரணியன், இராவணன் முதலியோரால்) பட்ட வேதனை யும். (7) உயர் கேடும் - பெரும் கேட்டையும். (8) கிளக்க உறல்போல் - விண்ணப்பிக்க வந்ததைப்போல. (9) கெழீஇ மகிழ்ச்சி பூர்த்தி வந்து—மகிழ்ச்சி மிகுந்து நிறைந்து வந்து. (10) அன்பின் கலந்தெனத் தொட - அன்பில் கலந் தது போல் (தாயர்) தொட. (11) பொற்பு உற - பொலிவு தோன்ற. (12) சீர்த்தி வந்து - (இத்தகைய செய்திகளால்) சிறப்பு வெளிப்படத் தோற்றி. (3)

**15.** ஓங்குமறை[1] உள்ளூறும் பிரணவக் கனிபழுத்து
ஒண்பொருள் [2]செம்சு வைத்தாய் ;
ஊற்றிருந்து ஊறிப், பெருக்கெழீஇ வழிதல்போல்,
ஒழுகுவாய் [3]ஊறல்அமுதம்
தாங்குபொன் [4]வரைமார்பில், உபநயன விதிமுறை
சடங்குசெய் யாது,தானே
தங்கத் தரித்திடும் [5]தவளஉப வீதம்[6]இது
தான்எனத், தக்க சீரோ(டு,)
[7]ஏம்குலவு மழலைமொழி, குழலினிது யாழினிது
எனும்குறட்கு ஓர் இலக்கா :
எம்பிரா னே(டு)எம் பிராட்டியும் கண்டு மகிழ்வு
எய்திஇறு மாந்திருப்பத்,
தேங்குமதி முகநிமிர்த்து ஒருசேய் இளம்களிறு
செங்கீரை யாடி யருளே !
சிற்பரம் பொருளருளும் நற்பரங் கிரிமுருக !
செங்கீரை யாடி யருளே !

(1) மறை உள்ளூறும் - வேதக் கருவில் விளைந்த. (2) செம் சுவைத்தாய் - செம்மைச் சுவை யுடையதாய். (3) வாய் ஊறல் அமுதம் - திருவாயில் பிறந்த நீரான

அமுதமானது. (4) வரை - மலை போன்ற. (5) தவள உபவீதம் - (முத்துப்போல்) வெண்மையான முந்நூல். வாயூறிய நீர் மார்பில் ஒழுகல், முத்துப் பூணூல்போல் தோன்ற எனும் நயம் இங்கு எண்ணத் தகும். (6) இதுதான் எனத்தக்க சீரோடு - இதுதான் என்று சொல்லத் தக்க சிறப்புடன். (7) ஏமம் என்பது, எதுகை நோக்கி ஏம் என நின்றது. ஏமம் - இன்பம். (4)

**16.** [1]பொன்மய வரைக்கண் முளைத்தெழும் [2]பச்சிளம்
பொருவில் கொடி, [3]ஒருமருந்(து)இல்
புலவியில், [4]தனதுஅம் புயங்களில் [5]அலர்த்தும்[6]அம்
புயமலர்களும், புதுப்பொன்[7]
னின்மய நிறச்சிறிய அரவிந்தம் ஒன்(று,)[8]அரை
யில்பாதி, [9]இப்பா தியி
னிற்பாதி மலர்தரத், [10]தத்தமக்கு உற்றவாறு
[11]இனிதுபூத் திடுதல் ஏய்ப்பத்,
[12]தன்மயம் நிலைக்கும் [13]செழும்பவள மலையினில்
[14]தன்னடிச் சுவடு தங்கத்,
தான்மிதித்து ஏறிக், [15]களிகூர விளையாடு
சரவணத் தினில் சனித்த
சின்மலை சொருபமு இருமுகத்து இளமதலை
செங்கீரை யாடி யருளே !
சிற்பரம் பொருளருளும் நல்பரங் கிரிமுருக !
செங்கீரை யாடி யருளே !

(1) பொன் மய வரைக்கண் – இமய மலையில். (2) பச்சிளம் பொருவில் கொடி - பசுமையும் இளமையும் உடைய ஒப்பிலாத பூங்கொடியான உமாதேவி. (3) ஒரு மருந்து இல் புலவியில் - (எந்த) ஒரு பரிகாரமும் இல்லாத ஊடலில். (4) தனது அம்புயங்களில் - சிவனாரது அழகிய திருத்தோள்களில். (5) அலர்த்தும் - விளங்கச் செய்யும். (6) அம்புய

மலர்களும் - திருவடி மலர்களால் ஆன சுவடுகளும். (7) பொன்னின் மய நிறச் சிறிய அரவிந்தம் ஒன்று - பொன் மயமான வண்ணத்தை யுடைய திருவடி ஒன்று. (8) அரையில் பாதி - கால் பகுதியும். (9) இப் பாதியினில் பாதி - இந்தக் காலில் பாதியான அரைக்கால் பகுதி யுமாக. (10) தத்தமக்கு உற்றவாறு - தத்தமக்கு ஏற்ற வண்ணம். (11) இனிது பூத்திடுதல் ஏய்ப்ப - இனிது மலர்தலைப் போல. (12) தன்மய நிலைக்கும் - எங்கும் தன் மயமாக நிலை பெற்றிருக்கும். (13) செழும் பவள மலையி னில் - செழுமையான பவள மலைபோன்ற சிவத்தின் இடத் தில். (14) தன் அடிச்சுவடு தங்க - தன் திருவடிகளின் அடையாளம் தங்கும்படியாக. (15) களி கூர - (அச் சிவ பிரான்) உள்ளம் களி மிகும்படி.

ஊடல் கொண்டதேவி, சிவனார் திருத்தோள்களில் திருவடி அடையாளமிட, சுவடு தங்கிய அதே புயங்களில், அரைப் பாதமும், கால் பாதமுமான அடையாளம் அமையக், கண்டபடி மிதித்து ஏறிச் சிவம் மகிழ விளையாடுகின்ற வனும், ஞான சொரூபனும், அறுமுகனுமான முருகா! செங்கீரை யாடியருள் என்றபடி. (5)

### வேறு சந்தம்

**17.** [1]உரகரும், மனிதரும், அமரரும் அன்பின்
[2]உவந்து பணிந்தாரேல்,
உறுநமன் [3]உரமற எதிர்[4]பொருது, [5]உந்தையின்
[6]உந்தி உதைந்தாடி;
[7]வர(வு)[8]அதி விரைவின் எழுந்து பயின்றிட
வந்த விதம்போல,
வளர்ஒளி [9]மணிகிளர் [10]பொன்செயும் அம்சிறு
[11]மஞ்சம் மகிழ்ந்தேறி

விரவிய [12]அமளி கிடந்து, சதங்கை
[13]மிளிர்ந்திடு நின்தாளின்
மெல்ல உதைந்து, அமுது ஊறு பெரும்விரல்
மென்சுவை [14]உண்டாடும்
அரன்அருள் ஒருமகன், அரிதிரு மருமகன்
ஆடுக செங்கீரை !
அறம்குறை யாத பரங்கிரி வேலவன்
ஆடுக செங்கீரை !

*(1) உரகரும் - நாகரும். (2) உவந்து — மகிழ்ந்து. (3) உரம் அற - வலி கெட. (4) பொருது - மோதுகிற. (5) உந்தையின் - உமது பிதாவான சிவனுரைப்போல். (6) உந்தி உதைந்து ஆடி - முன்னும் பின்னுமாக (த் திருவடி) உதைத்து விளையாடி. (7) வரவு - (அன்பர்க்கு அருள) வருகை கருதி. (8) அதி விரைவின் - மிக்க வேகத்துடன். (9) மணிகிளர் - நவமணி மிகப் பதித்து. (10) பொன் செயும் - பொன்னால் செய்த. (11) மஞ்சம் - தொட்டில். (12) அமளி - படுக்கை. (13) மிளிர்ந்திடு - மிக்கு ஒளிரும். (14) உண்டு ஆடும் - பருகி விளையாடுகின்ற.* (6)

18. [1]விட்டில(கு) அம்பொன் மணிப்[2]பணி சிரம்,[3]உரம்,
மார்புமென் செவி,அரை, கை,கால்
மீது[4]புனைந்தவர் [5]விட்டிடு விழிகளை
[6]மென்மணி [7]பலபைங்கார்ப்
பட்டில் இசைந்த குறுந்தொடர் ஊடு
பதித்தொரு நான்அணியும்
[8]பரிசென நீர்நுண் [9]துளிவிழி [10]யிமைமயிர்
பயில அரும்பி மலர்த்
தொட்டிலின் [11]உந்தி எழீஇமென் குரலிசை
சுவைதர விளையாடுந்

தொறும்,இரு புறமா மகளிர்கள் [12]பாடிய
சுரரொடு தானும் அவர்க்(கு,)
அட்டிலின் அமுதென உண்டு களிப்பவன்,
ஆடுக செங்கீரை !
அறம்குறை யாத பரங்கிரி வேலவன்
ஆடுக செங்கீரை !

*(1) விட்டு இலகும் - (பளிச் பளிச்சென்று) மிளிரும். (2) பணி - ஆபரணங்களை. (3) உரம் - மார்பு. (4) புனைந்தவர் - அலங்கரித்த தாயர்கள். (5) விட்டிடு விழிகளை - (தன்னையே) ஊன்றி நோக்கும் கண்களை. (6) மென்மணி - உயர்ந்த பல இரத்தினங்களை. (7) பைங் கார்ப் பட்டில் இசைந்த குறும் தொடரூடு - பசுமையான நீலப் பட்டு நூலில் கோர்த்த இழையுடன்; தன்னை நோக்கும் தாயர் கண்களை, இழையூடு பதித்து, அவைகளையும் சேர்த்து தான் அணியும் தன்மைபோல என்றபடி. (8) பரிசு - சிறந்த தன்மை. (9) நுண் நீர் துளி - நுண்ணிய வியர்வை நீர்ச் சிறு துளி. (10) விழி இமை மயிர் பயில அரும்பி - கண்ணிமை மயிர்கள் பெறும்படி அரும்ப வைத்து; அரும்பி - பிறவினை. (11) உந்தி எழீஇ - ஊக்கி எழுந்து. (12) பாடிய - பாட; செய்யிய எனும் வினையெச்சம். (7)*

**19**. ஒளிவளர் நாம்,[1]இது பணிபுரி யும்தவம்
ஒன்று யினும்முன்செய்
தோம்இலே என,விண் [2]மீன்இனம் முழுவதும்
[3]உள்ளழி தர,ஓரா(று)
[4]இளிவரும் அவ்விண் மீன்மட [5]மாதர்,
எடுத்திரு கையும் மெய்யும்
இன்புறு மாறு தழீஇ,மழ [6]இளமைக்(கு)
[7]இயல்பணி பலசெய்து,

தெளிவறும் அசுரர் குலங்களை இனிநீ
[8]தீம்பயம் ஊட்டியநின்
திருவா யினில்,உயர் [9]தருவாய் அமரர்
செழும்தெள் அமுதே போல்,
அளிவளர் [10]தீம்பயம் ஊட்டி வளர்த்தவன்
ஆடுக செங்கீரை!
அறம்குறை யாத பரங்கிரி வேலவன்
ஆடுக செங்கீரை!

*(1) இது - இந்த. (2) விண் மீன் இனம் - விண்ணில் உள்ள நட்சத்திரங்கள். (3) உள் அழிதர - மனம் வருந்த. (4) இளிவரும் - இளி எனும் பண் கைவந்த (5) மாதர் - கார்த்திகை மாதர். (6) மழ இளமைக்கு - இளம் சேய்மைக்கு. (7) இயல் - (தம்மால்) இயன்ற. (8) தீம் பயம் ஊட்டிய - தீமை யச்சம் ஊட்ட; இது செய்யிய எனும் வினையெச்சம். (9) தருவாய் - கற்பகத் தருநிழலில் இருந்த. (10) தீம் பயம் - இனிக்கும் அமுதம். தீம்பயம் ஊட்ட, தீம்பயம் ஊட்டி வளர்த்தவன் என்றபடி.* (8)

**20.** [1]நீடு பரம்பரர் சூடும் மணந்தனின்
[2]நின்றே அன்பார,
[3]நீஅகல் கென்(று)அவர் ஏவ,[4]அரும்தமிழ்
நெஞ்சா ரும்சீலம்
[5]நாடு பெருந்தவன், [6]ஊடுறை கின்ற
[7]நயம்சார் [8]அம்சாரல்
நாகம் நிமிர்ந்துயர் [9]நாடு புனைந்திடு
[10]நன்கே யும்தேசு,
கூடும் [11]அரும்கல மாமகு டம்புரை
குன்று மென்கோகை[12]
[13]கூவு கரும்குயில் மேவு பரங்கிரி
குன்று [14]நண்பாளர்,

தேடு பெரும்பொருள் ஆக எழுந்தவ!
செங்கோ செங்கீரை
சேவல் [15]அரும்பு பதாகை பெறும்கர
செங்கோ செங்கீரை!

(1) நீடு பரம்பரர் - அநாதி நித்தியரான சிவபிரான். (2) அன்பு ஆர நின்று - அன்பு பொருந்த இருந்து. (3) நீ அகல்க என்று அவர் ஏவ - (வடநாடும் தென்னாடும் சமம் பெற) நீ (பொதிகை மலையில் தங்கப்) போ என்று அச் சிவபிரான் ஏவ. (4) அருமைத் தமிழால் நிறைந்த மன ஒழுக்கம் உடைய என்றபடி. (5) நாடும் பெருந்தவன் - விரும்பி யடையும் பெருந்தவத்து அகத்தியர். (6) ஊடு உறைகின்ற - நடுவிடத்துத் தங்கிய. (7) நயம் - (குளிர்ந்த) வளம். (8) அம் சாரல் நாகம் நிமிர்ந்து - அழகிய சாரலை யுடைய பொதிகை மலையில் கம்பீரமாகத் தங்கி. (9) உயர் நாடு புனைந்திடும் - உயர்ந்த பாண்டி நாட்டை அணி செய்த. (10) நன்கு ஏயும் தேசு கூடும் - மங்கலம் பொருந்திய ஒளி சேரும். (11) அரும் கலமாம் மகுடம் புரை - சிறந்த அணி கலமாம் மகுடம் போன்ற. (12) தோகை - மயிலும். (13) கூவும் குயிலும் விரும்பிச் சேரும் திருப்பரங்கிரியில் என்க. (14) நண்பாளர் - அன்பர்கள். (15) அரும்பு பதாகை பெறும் கர - அரும்பிய கொடி பிடித்த திருக்கரத்தனே. (9)

**21.** [1]கூனல் இளம்பிறை [2]வேணியர்[3]அஞ்சலி
கொண்டே இன்பான
கோதில் அரும்பொருள் ஓதி மகிழ்ந்த
குழந்தாய்! [4]எந்தாய்![5]முன்
[6]கானவர் அங்கனை யான சௌந்தரியே[7]
கண்பார் என்றே [8]மென்

காலில் விழுந்தெழு [9]மாலின் மயங்கிய
கந்தா! செந்தூரின்
[10]மான மிகுந்தெதிர் சூரனை வென்றுயர்
[11]மஞ்சா டும்சோலை
[12]வாவி வளம்பல ஆகு பரங்கிரி
வந்தாய்! [13]அம்தாது
தேனலர் [14]அம்புய பாதம் உறும்குக!
செங்கோ செங்கீரை!
சேவல் அரும்பு பதாகை பெறும்கர!!
செங்கோ செங்கீரை!

*(1) கூனல் இளம் பிறை - வளைந்த இளந் திங்கள் சூடிய. (2) வேணியர் - சடை முடி யுடைய சங்கரர். (3) அஞ்சலி கொண்டே - அஞ்சலித்த திருக்கரத்தைக் கண்டு. (4) எந்தாய் - எமது அப்பனே. (5) முன் - முன்னொரு காலத்தில். (6) கானவர் அங்கனை ஆன - வேடர் மகள் ஆன. (7) சௌந்தரியே - அழகியே! (8) மென் காலில் விழுந்து எழும் - (அவ் வள்ளியாருடைய) திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்த. (9) மாலின் மயங்கிய — (காதலால்) மயங்கி நின்ற. (10) மானம் மிகுந்து - மானத்தில் (நோக்கம்) மிகுத்து; "தடுத்தது மானம் ஒன்றே" என்பது கந்த புராணம். (11) மஞ்சு ஆடும் - மேகங்கள் தங்கி உலவும். (12) வாவி — நீரோடைகள். (13) அம் தாது - அழகிய மகரந்தங்களுடன். (14) அம்புய பாதம் - அழகிய திருவடித் தாமரைகள்.* (10)

## 3. தாலப் பருவம்

(பகழிக்கூத்தர் அருளிய)

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

---

[தொட்டிலில் இட்டுத் தாலாட்டும் பருவம்: இது ஏழாம் திங்களில் நிகழ்வது என்பர்.]

22. [1]அடரும் பருநவ மணிமுடி அமரரும்
அமரர்க்கு இறைவனும் [2]நீ(டு)
அளகை நராதியும், [3]ஈரொன் பதின்மரும்,
அருமறை முனிவோரும்,
[4]சுடரும் தரும்இரு [5]சுடரும், பரவிய
தோகையர் [6]எழுவருமுத்
தொழில்முக் [7]கடவுளும், அவரவர் தம்குறை
சொல்லித் துதிசெய்தார் ;
[8]படரும் கிரணப் [9]பரிதி நெடும்கதிர்
பாயும் [10]பகிரண்டம்
[11]பழுமரம் என்னப், பனையென [12]நிமிரும்
[13]பாழிக் கைந்நீட்டித்
தடவும் [14]புகர்முக [15]தந்திக்கு இளையாய் !
தாலோ தாலேலோ
[16]சந்த மணம்கமழ் செந்தில் பதியாய்!
தாலோ தாலேலோ

(1) அடரும் - நெருங்கிச் சேரும். (2) நீடு அளகை நராதியும் - பெரிய அளாகபுரிக்கு அதிபனான குபேரனும். (3) ஈரொன்பதின்மரும் - பதினெண்வகைச் சிவகணங்களும். (4) சுடரும் - பிரகாசிக்கும். (5) சுடரும் - சூரிய சந்திரர்களும். (6) எழுவரும் - சப்த கன்னியரும். (7) முக்கடவுளும் - பிரம விஷ்ணு ருத்ரரான திரிமூர்த்திகளும். (8) படரும் - விரிந்து பெருகும். (9) பரிதி நெடும் கதிர் -

சூரியனுடைய அளவிலாத கிரணங்கள். (10) பகிர் அண்டம் - பேரண்டத்தில். (11) பழுமரம் என்ன - ஆலமரம் எனும்படி. (12) நிமிரும் - உயர்தரும். (13) பாழிக் கை - பெரிய துதிக்கை. (14) புகர் - புள்ளிகள் நிறைந்த. (15) தந்திக்கு - யானையான கணபதிக்கு. (16) சந்தம் - சந்தனம். (1)

23. [1]கங்குல் பொருந்திய குவளைக் குழியில்,
கழியில், [2]பழனத்தில்,
கரையில், கரைபொரு திரையில், வளைந்த
[3]கவைக்கால் வரியலவன்
பொங்கு குறுந்துளி [4]வாடையில் நொந்து
பொருதே வெயில் காயும்
[5]புளினத் திடரில், [6]கவரில், [7]துரவில்,
புன்னை நறுந்தாதில்,
[8]கொங்கு விரிந்த மடல்பொதி தாழைக்
[9]குறுமுள் கரியபசும்
கோலச் சிறிய [10]குடக்கா யில், [11]புயல்
கொழுதும் [12]செய்குன்றில்,
சங்கு முழங்கிய செந்தில் பதியாய் !
தாலோ தாலேலோ
சமய விரோதிகள் [13]திமிர திவாகர
தாலோ தாலேலோ.

(1) கங்குல் பொருந்திய-இரவில் மலர்ந்த.(2) பழனத்தில்-வயல்களில். (3) கவைக்கால் வரி அலவன் - பிளவு பட்ட கால்களை யுடைய நண்டுகள். (4) வாடையில் - வாடைக் காற்றால். (5) புளினத் திடரில் - மணல் மேட்டில். (6) கவரில் -வெடிப்பு நிலத்தில். (7) துரவில் - கிணறுகளில். (8) கொங்கு - மணம். (9) குறுமுள் – சிறியமுள்களையும். (10) குடக் காயில் - குடம் போன்ற உருவுடைய தாழங்காய்களில். (11) புயல்-மேகம். (12) செய்குன்றில் - (மக்கள் தாமே)

அமைத்த குன்றில். (13) திமிர திவாகர - இருளகற்றும் பரிதியே. (2)

வேறு

**24.** தண்தேன் ஒழுகும் மொழிமடவார்
[1]தாமம் [2]கொழுதிச், [3]சுருண்(டு) இருண்டு,
[4]தமரக் களிவண்(டு) [5]அடைகிடந்து,
தழைத்து [6]நெறித்த குழல்பாரம்
கொண்டே மெலிந்த(து) அல்லாது,
குரும்பைக் களப முலைசுமந்து
கொடிபோல் [7]மருங்குல் [8]குடிவாங்கக்,
[9]குழையில் குதித்த [10]விழிக்கயலைக்
கண்டே [11]வெருவிக் [12]கயல்மறுகக்,
[13]கனக வெயில்மா ளிகை[14]யுடுத்துக்
[15]ககனம் தடவும் கோபுரத்தைக்
கருதி [16]வடவெற் பெனக்[17]கதிரோன்
திண்தேர் [18]மறுகும் திருச்செந்தூர்ச்
செல்வா! தாலோ தாலேலோ
[19]தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ.

(1) தாமம் - மலர்மாலையை. (2) கொழுதி - கிளரி. (3) சுருண்டு இருண்டு - வளைந்து கருகி: (4) தமரக் களி வண்டு - பேரொலி எழுப்பும் களிப்புடைய வண்டுகள். (5) அடை கிடந்து - (முட்டை குஞ்சாக) அவயங் காத்து. (6) நெறித்த குழல் பாரம் - அடர்ந்த கூந்தல் பாரம். (7) மருங்குல் - இடை. (8) குடிவாங்க - இற்றுப் போக. (9) குழையில் குதித்த - காதளவு நீண்ட. (10) விழிக் கயலை - கண்களாகிய சேல் மீன்களை. (11) வெருவி - அஞ்சி. (12) கயல் மறுக - (நீர் வாழ்) கயல் மீன்கள் சுழல. (13) கனக வெயில் - பொன் ஒளி வீசும். (14) உடுத்து - சூழப்

பெற்று. (15) ககனம் தடவும் - விண் அளாவிய. (16) வட வெற்பு என - வட திசை மேரு மலை என்று கருதி. (17) கதிரோன் - சூரியன். (18) மறுகும் - மயங்கும். (19) தெய்வக் களிற்றை - தெய்வ யானையை. (3)

**25.** பாம்பால் [1]உததி தனைக்கடைந்து,
[2]படரும் கொடும்கார் சொரிமழைக்குப்
[3]பரிய வரையைக் குடைகவித்துப்,
பசுக்கள் வெருவிப் [4]பதருமல்
[5]காம்பால் [6]இசையின் தொனியழைத்துக்,
[7]கதறும் தமரக் காளிந்திக்
கரையின், [8]நிரைப்பின் னேநடந்த
கண்ணன் மருகா! [9]முகையுடைக்கும்
பூம்பா[10] சடைப்பங் கயத்தடத்தில்,
[11]புனிற்றுக் கவரி முலை[12]நெரிந்துப்
பொழியும் [13]அமுதந் தனைக்கண்டு
புனலைப் பிரித்துப் [14]பேட்(டு)எகினம்
தீம்பால் பருகும் திருச்செந்தூர்ச்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ!

(1) உததி தனை-கடலை. (2) படரும் கொடும் கார்-விரியும் கொடூரமான மேகங்கள். (3) பரிய வரையை - பெரிய கோவர்த்தன மலையை. (4) பதருமல் - நடுங்கிச் சிதையாத படி. (5) காம்பால் - மூங்கிலால் சமைந்த புள்ளாங் குழலால் (ஆன). (6) இசையின் தொனி - இசை ஒலியால். (7) கதறும் தமரக் காளிந்தி - முழங்கும் பேரொலி யுடைய காளிந்தி நதி. (8) நிரை - பசுக்கள். (9) முகை - அரும்பு. (10) பாசு அடை - பசுமை இலைகள். (11) புனிற்றுக் கவரி - இளமை

எருமை. (12) செரித்து - கட்டு விட்டு. (13) அமுதந்தனை பாலை. (14) பேட்டு எகினம் - பெண் அன்னம். முகை உடைக்கும் கவரி எனக் கூட்டுக. (4)

வேறு

**26.** [1]மங்கல மங்கலநூல், எங்கும் மொழிந்தனர்காண்,
வானோர் ; [2]ஏனோர் போய்
வந்து வணங்கினர் ;மேல் அந்தர துந்துபிகேள் !
[3]வார் ஊ(டு) ஆடாதே,
கொங்கைசு மந்(து)இடை நூல் அஞ்சும் அணங்கனையார்
[4]கூடா(து) ஊடாரோ ?
[5]கொண்ட வரம்தருவாய் ; அண்டர் பெரும்தவமே !
[6]கோமான் ஆமா நீ ?
செங்கம லந்தனிலே, பைங்குமு தங்களிலே
சேல்பாய் [7]வானடா !
தென்றலு டன்தமிழ்தேர் தென்பொதி யம்பயில்வாழ்[8]
தேனுர் [9]தார்மார்பா !
[10]சங்கு [11]வலம்புரிசூழ் செந்தில் வளம்பதியாய் !
தாலோ தாலேலோ !
[12]சங்கரி தன்மருகா ! [13]மங்கையர் தம்கணவா !
தாலோ தாலேலோ !

(1) மங்கல மங்கல நூல் - மங்கலம் ஆகிய வாழ்த்து நூல்களை. (2) ஏனோர் - மற்றவர்கள். (3) வார் ஊடு - கச்சு எனும் ரவிக்கை நடுவில். (4) கூடாது ஊடாரோ - (அவர்க்ள் கேட்ட வரங்களை நீ அளிக்கா திருந்தால், அவர்கள் உன்னுடன்) சேராமல் பிணக்கம் செய்ய மாட்டார்களா? (5) கொண்ட - நினைத்த. (6) நீ கோமான் ஆமா - (வரம் கொடாவிடில்) நீ தலைவனாக எப்படி யிருக்க முடியும்? (7) வான் நாட்டா - சிறந்த பாண்டி நாடனே. (8) வாழ் - வாழ்க்கையுள்ள. (9) தார் - மாலை. (10) சங்கு - (இடம்புரி

சலஞ்சலம் முதலிய) சங்குகளும். (11) வலம்புரி - வலம்புரி எனும் சங்குகளும். (12) சங்கு அரி - பாஞ்ச சன்யம் எனும் சங்கம் ஏந்திய திருமால். (13) மங்கையர் - வள்ளி தெய்வயானையர். (5)

வேறு

**27.** [1]மரகத வடிவம், செங்கதிர் வெயிலால், [2]வாகாய் வாடாதோ
மதிமுகம் முழுதும், தண்துளி தரவே, [3]வார்வேர் சோராதோ
[4]கரமலர் அணைதந்(து) இன்புறு [5]மடவார், [6]காணுதே போமோ
கனமணி குலவும் குண்டலம், அரைஞாணுடே போனல்,வார்
[7]பொருமிய முலேயும் தந்திட, உடனே தாய்மார் தேடாரோ
[8]புரவலர் எவரும் கண்டடி தொழுவார் [9]போதாய் !
[10]போதாம்நீள்
சரவணம் மருவும் தண்தமிழ் முருகா ! தாலோ தாலேலோ
சதுமறை பரவும் செந்திலே யுடையாய் தாலோ தாலேலோ.

(1) மரகத வடிவம் - (உனைத் தேடுதலால்) பசுமை மேனி. (2) வாகாய் - சிறிது சிறிதாக. (3) வார்வேர் - மிக்க வேர்வை. (4) கரமலர் அணை - கை மலரான அணை; மெத்தை. (5) மடவார் - பெண்களாகிய யாங்கள். (6) காணுதே போமோ - காணுமலே திரும்பிச் செல்வோமா; போவோமோ என்பது போமோ எனக் குறைந்து நின்றது. (7) பொருமிய முலேயும் - பூரித்த முலைப்பாலும். (8) புரவலர் - காவல் பணி செய் ஏவலர். (9) போதாய் - உடனே வருவாயாக. (10) போது ஆம் - மலர்கள் மலரும். (6)

வேறு

**28.** [1]கூடும்இகல் சாய்த்த வீரா ! தீரா ! தார்மார்பா !
கூறும்இயல் [2]பார்த்துன் மேலே யாரார் பாடாதார்
[3]மேருவரை நாட்டு வாழ்வார், வானு(டு) ஆள்வார்போல்
[4]வேலையென [5]மீட்டுன் மேலே [6]வீழ்வார், சூழ்வார்பார்

[7]ஆரும்இரை பார்த்து, நீள்நீ ரூடே [8]தாரா மேய்
ஆனகழி [9]நீக்கி மேலே [10]நாவர யோடே, சேல்[11]
சேரும்அலை [12]வாய்க்கு நாதா தாலோ தாலேலோ
தேவர்சிறை மீட்ட தேவா தாலோ தாலேலோ

(1) கூரும் இகல்–பெருகியெழும் (சூரபதுமன்) போரை. (2) இயல்-(உன்) சொருபத்தை. (3) மேருவரைநாட்டு-மேரு மலையை ஆட்சியில் சேர்த்த பாண்டி நாட்டில். (4) வேளை என – (இது தான்) சமயம் என்று. (5) மீட்டு - மீளவும் வந்து. (6) வீழ்வார் – வீழ்பவராகி. (7) ஆரும் இரை - உண்ணும் உணவை. (8) தாரா – பறவை யினத்துள் ஒன்று. (9) கழி – உப்பங்கழி நிலத்தை. (10) நாவாய் - மரக்கலம். (11) சேல் - சேல்மீன். (12) அலைவாய் - செந்தில்.

வேறு

**29.** அரைவடமும், தண்டையும், [1]மின்புரை யரைமணியும்,
கிண்கிணி யும்,[2]கலன் அணியும், [3]மாரு வீருர்சீர்
அறுமுகமும், [4]தொங்கல் சுமந்தபன் னிருகரமும்,
குண்டல மும்,குழை அழகும், ஆரார் பாராதார்?
[5]விரைபொரு மென்[6]குஞ்சி அலம்பிய புழுதியும்,அங்
கங்குழை [7]பண்டியும் மெலியும் ; [8]மேலே வீழ்வார்பார் !
வெருவிதமும் கொண்டு [9]தவழ்ந்திடில், அவரவர்தம்
[10]கண்கள் படும்பிழை விளையும் ; [11]ஏதேன் ஏகாதே ;
[12]வரைமணியும், தங்கமும் ஒன்றிய [13]கனபரியங்
கந்தனில், இன்றுகண் [14]வளர வாராய், வாழ்வேநீ !
[15]மணிநகையும் கொண்டு துயின்றிலை ; [16]விரலமுதம்
கொண்டு கிடந்தனை ; மதுரமாய்நீ பேசாயோ ?
[17]திரைபொருதென் செந்தில் வளம்பதி, வளரவரும்
கந்தசி வன்பெறு சிறுவா ! தாலோ தாலேலோ
திசைமுகனும், [18]சங்கரி யும்,சது மறையும் இறைஞ்
சும்பரை அம்பிகை சிறுவா ! தாலோ தாலேலோ

(1) மின்புரை - மின்னல்போல் மின்னும். (2) கலன் அணியும்-அணியும் பிற ஆபரணங்களும். (3) மாறு வீறு ஆர்- மாறுபாடு அடையாத விளக்கம் அமைந்த. (4) தொங்கல்— மாலை. (5) விரை பொரு - மணம் பொருந்திய. (6) புழுதி அலம்பிய குஞ்சியும் - அழுக்கை யகற்றிய குடுமியும். (7) பண்டியும் மெலியும் - வயிறும் வாடும். (8) மேலே வீழ்வார் (உன்) மேல் வீழ்வார் ; விரும்புவார் எனினுமாம். (9) தவழ்ந் திடில் - (ஓரிடமின்றி இப்படியே நீ) தவழ்ந்து கொண்டிருந் தால். (10) கண்கள் படும் பிழை விளையும் - கண்ணேச் சில் படும். (11) ஏதேன் ஏகாதே – (மேல் சொன்னவை களில்) எது தான் நிகழாது; (எதுவும் விளையும் என்றபடி.) (12) வரை - மலை. (13) கன பரியங்கந் தனில் - சிறந்த தொட்டிலில். (14) கண்வளர - கண் துயில. (15) மணி நகையும் - முத்துப் போன்ற இளம் சிரிப்பும். (16) விரல் அமுதம் கொண்டு - கால் விரலைச் சுவைத்துக் கொண்டு. (17) திரைபொரு - (கடல்) அலைமோதும். (18) சங்கரியும்— (சங்கினை ஏந்திய) திருமாலும். (8)

வேறு

**30.** அரவு,சிறு பிறை [1]யிதழி ; [2]திரிபதகை [3]பொதிசடிலர்
பாலா ! வேலா தேர்
[4]அருணவெயில் [5]இரவிசூழல் [6]இமகிரியில், அரிவைபெறு
வாழ்வாய் வாழ்வோனே !
[7]குரவர்உளம் மகிழ,உயர் குருவடிவு தருபெருமை
[8]கோடாய், [9]தாடாளா !
குமரகுரு பரமுருக ! குதலைமொழி தெரியவுரை
கூறுய் ! மாறுதே
[10]இரவலரும், முனிவர்களும், இமையவரும், [11]உனதடிமை
யாமே ஆமே ;நீ

எமைமுனியில், ஒருதுணையும் இலை,[12]யடிமை யடிமையென
[13]வீழ்வார் சூழ்வார் பார்!
[14]பரசமய குலகலக! சிவசமய குலதிலக!
தாலோ தாலேலோ
[15]பணிலம்உமிழ் மணியை,அலை எறியுநகர் வருகடவுள்
தாலோ தாலேலோ

*(1) இதழி - கொன்றை. (2) திரிபதகை - கங்கை. (3) பொதி சடிலர் - மொய்த்த சடையுடைய சிவனார். (4) அருண - சிவந்த. (5) இரவி சுழல் - சூரியன் வலம் வருகின்ற. (6) இமகிரியில் - இமய மலையில். (7) குரவர் - பெற்றோர்கள். (8) கோடாய் - கோணுதல் இல்லாதவனே. (9) தாடாளா - பெருமுயற்சியுள்ள பெருமானே. (10) இரவலரும் - யாசிப்பவரும். (11) யாமே உமது அடிமைகள் அல்லவா. (12) அடிமை யடிமை - அடிமைகளான நாங்கள் (உனது) தொண்டர்கள். (13) வீழ்வார் - விரும்புவாராய். (14) பரசமய குல கலக - புறம்பான சமயங்களைப் புறக்கணிப்பவனே. (15) பணிலம் உமிழ் மணியை - சங்குகள் உயிர்க்கும் முத்துகளை.* (9)

வேறு

**31.** [1]பங்கயன் முதலோர், இந்திரன், [2]இமையோர்
[3]பாரோர், [4]ஏனோர்,பார்!
[5]பண்புடன் உனையே, சிந்தையில் [6]நினைவார்
பால்,நீ [7]மால்கூர்வாய்!
[8]வெங்கட கரிசூழ் [9]எண்திசை உறைவார்,
[10]வீணாள் காணாதே,
[11]மின்பரி புரதாள், [12]பொன்புரை முடிமேல்,
[13]வேய்வார் வீறுலே;
[14]செங்கனி மணிவாய் தங்கிய [15]நகைதா!
தேவா! [16]சீருதே;

[17]திண்திறல் முருகா! தண்தமிழ் [18]விரகா!
[19]சேரார் போர்ஏறே!
[20]சங்கரி மருகா! [21]சங்கரி சிறுவா!
தாலோ தாலேலோ!
[22]சந்ததம் [23]இயல்தேர் செந்திலை யுடையாய்!
தாலோ தாலேலோ!

(1) பங்கயன் - கமலபீட நான்முகன். (2) இமையோர்- தேவர்கள். (3) பாரோர் - நிலவுலகர். (4) ஏனோர் - மற்றும் உள்ளவர்கள். (5) பண்புடன் - உணர் வொழுக்கத்துடன். (6) நினைவார்பால-எண்ணுவாரிடத்தில். (7) நீ மால்கூர்வாய்- நீ ஆர்வம் மிகுத்தவன் ஆவை. (8) வெம்கடகரி - உக்கிர மான மதம் நிறைந்த திசையானைகள். (9) எண்திசை உறை வார் - திக்குப் பாலகர்கள். (10) வீண் நாள் காணுதே - பய னற்றுக் கழியும் நாள்களைப் பாராதவராய். (11) மின் பரிபுர தாள் - மின்னும் சிலம்பணிந்த திருவடிகளை. (12) பொன் புரை - பொன்போன்ற. (13) வீறுலே வேய்வார் - பெரு மிதமாகச் சூடுவார்கள். (14) செங்கனி - சிவந்தகனி போன்ற. (15) வீறுலே நகைதா எனக்கூட்டி, பெருமிதம் பிறங்கப் புன்னகை செய் எனினும் அமையும். (16) சீறுதே- (இப்படி யெல்லாம் வேண்டுகிறோமே என்று) கோபம் கொள் ளாதே. (17) திண்திறல் - இருபெயரொட்டு; பேராற்றல் எனினுமாம். (18) விரகா - விருப்பனே. (19) சேரார் போர் ஏறே-(அறியாமையால்) அயலாகும் சிலரை, எதிர்த்து மடக்கும் அருள் ஆண்மையனே. (20) சங்கரி மருகா - சங்கை ஏந்திய திருமால் மருகா. (21) சங்கரி சிறுவா - (ஆன்ம) இளைப்பை அகற்றும் அம்மை மகனே. (22) சந்ததம் - எப் பொழுதும். (23) இயல் தேர் - (முத்தமிழில்) இயல் தமிழை ஆயும்.

---

## 4. சப்பாணிப் பருவம்

( தண்டபாணி சுவாமிகள் அருளிய)

# பழனிப் பிள்ளைத்தமிழ்

---

[இரு கைகளை ஒன்று சேர்த்துக் கொட்டும் பருவம்; இஃது ஒன்பதாம் மாதத்தில் நிகழ்வது என்பர்.]

**32.** [1]மந்திர சடாக்கரம் பகருமெய் அடியவர்தம்
வல்வினை அனைத்தும் ஓட;
[2]மரகத கலாபமயி லொடு,வேலை நினையுமவர்,
வந்து வந்(து) இனிது கூட;
[3]தந்திர கலைப்பிரியர் தாமும், அவருக்(கு) உரிய
தருமத்(து) அமைந்து வாழத்;
[4]தகுவரும், சமணரும், [5]சாக்கியரும் ஆதியர்,
[6]தருக்(கு)அகம் இழந்து தாழ;
இந்திர னுடன்,தேவர் தாமும்,[7]அறு சமயத்(து)
இயைந்தோரும், உவகை பொங்க;
[8]விஞ்சையும் [9]கொலைபுலையும் மருவியர் யாவர்களும்,
[10]இரவிமுன் பனியின் மங்கச்;
[11]சந்திர சடாடவிக் கிழவர்தரு பாலகா!
சப்பாணி கொட்டி யருளே!
தமிழ்வளம் பெரிதுவளர் பழனியங் கிரிமுருக!
சப்பாணி கொட்டி யருளே!

*(1) சடாக்கர மந்திரம் - ஆறு எழுத்து மந்திரம். (2) மரகதக் கலாபம் - பசும் தோகை யுடைய. (3) தந்திர கலைப் பிரியர் - ஆகம அருள் நூற்களில் ஆர்வமுள்ள அந்தணர் கள். (4) தகுவரும் - அவுணரும். (5) சாக்கியரும் ஆதியர்- பௌத்தர் முதலினோரும். (6) அகம் தருக்கு இழந்து தாழ -*

இதயச் செருக்கு நீங்கி விநயம் காட்ட. (7) அறுசமயம் - அகம் 6; புறம் 6; அகப்புறம் 6; புறப்புறம் 6 எனும் 24 சமயத்தவரும். (8) விஞ்சையும் - (சூன்யமந்திர) வித்தையும். (9) கொலை புலையும் மருவியவர் - கொல்லுதலும் புலால் உண்டலும் உடையோர். (10) இரவிமுன் பனியின் மங்க - சூரியன் முன் பனிபோல் அடங்க. (11) சந்திர சடாடவிக் கிழவர் - மதியணி சடைக் காடுடைச் சிவனார்.

**33.** அண்டபே ரண்டங்கள் இடமுற்ற பாம்பினம்,
அனைத்தும் வசமாக [1]அகவுற்(று);
அரிதாய நாததத் துவம்வரை, கலாபத்தின்
அணிகிளர்ந் திடவிரித்துக்;
[2]கொண்டல் சூழ் [3]குலவரைகள், தவிடெனப் பொடிபடக்,
குதூகல நடனம் ஆடி;
கோரம்மிகு [4]தானவர்கள், பைசாசர் [5]முதலினர்க்
கொத்திக் கிழித்(து) அருந்தி;
எண்தகு [6]திசைப்பா லனத்தர்முத லியதேவர்,
யாவரையும் ஆதரித்திட்(டு);
இணையில் [7]குடிலைச்சத்தி என்றுணரும் அறிஞருக்(கு)
இனியஅநு பூதி உதவும்
[8]சண்டவே கத்தனி மயில்பரி [9]உகைப்பவா!
சப்பாணி கொட்டி யருளே!
தமிழ்வளம் பெரிதுவளர் பழனியம் கிரிமுருக!
சப்பாணி கொட்டி யருளே!

(1) அகவுற்று - அகவி. (2) கொண்டல் - மேகங்கள். (3) குல வரைகள் - எண் திசை மலைகள். (4) தானவர்கள் - அசுரர்கள். (5) முதலினர் - முதலியோரை. (6) திசைப்பால னத்தர் - திசைபரிபாலகர். (7) குடிலைசத்தி - பிரணவ சக்தி.

(8) சண்ட வேகம் - அளவிலாத வேகம். (9) உகைப்பவா - செலுத்துபவனே. (2)

**34.** [1]மகம் [2]முயன் றிடும்நார தாதி முனிவோர் எலாம்,
மனம் நடு நடுங்கி ஓட ;
வானத்து [3]மேடமும், [4]குசன்ஆடும், அக்கினிதன்
[5]மைப்பரியும் [6]வெட்கி உட்க ;
மிகமுழங் கிக்,கரிய [7]கோ(டு)இரண் டொடு[8]நிலவும்
மேருவரை யென உதித்து ;
விண்ணில் புகுந்(து) இந்திரன் தன்நகரில், தேவர்
[9]வெருளூற வெகுண்டு முட்டி ;
நிகரில்[10]கம லாதனத் துற்றபிர மன்தன்நகர்,
[11]நெளிநெளி தரக் கலக்கி ;
நெடுமாயன்[12]நகரினும் புக்(கு,) அளவில்[13]இன்னல்கள்
நிறைத்(து)உலா வித் திகழ்ந்த
[14]தகரினை அடக்கி ஒரு [15]பரியெனக் கொண்டவா !
சப்பாணி கொட்டி யருளே !
தமிழ்வளம் பெரிதுவளர் பழனியம் கிரிமுருக !
சப்பாணி கொட்டி யருளே !

(1) மகம் - வேள்வியை. (2) முயன்றிடும் - முயன்று செய்யும். (3) மேடமும் - மேஷ ராசியும். (4) குசன் ஆடும் - அங்காரகன் ஊர்தியான ஆட்டுக்கடாவும். (5) மைப்பரியும் - ஊர்தியான ஆடும். (6) வெட்கி உட்க - நாணி நடுங்க. (7) கோடு - கொம்புகள். (8) நிலவும் - விளங்கும். (9) வெருள் உற - மிரட்சி யடைய. (10) கமல ஆதனத்து உற்ற - தாமரை யாசனத்தில் தங்கிய. (11) நெளிநெளிதர - பெரிது நெளிய. (12) நகரினும் - வைகுந்தத்தும். (13) இன்னல்கள் - துன்பங்கள். (14) தகரினை - (நாரதர்செய்த வேள்வியில் பிறந்த) ஆட்டுக்கடாவை. (15) பரி - ஊர்தி. (3)

35. [1]கங்குல் இன்றிய பொன் நகர்க் [2]கடவுள் [3]யானைதரு
கன்னி மனம் நொந்து வாட ;
[4]ககனமுனி மொழிவழி [5]கடுக்கென்(று) எழுந்(து,) ஒரு
[6]கருங் கானகம் புகுந்து ;
[7]வெங்குறவர் [8]ஏனல் அருகில் [9]சிறுமி யைக்கண்டு,
வேடம் வெவ் வேறு கொண்டு ;
வேங்கை மரம் என்று நின்(று,) அவள்தரு [10]தினைப்பிண்டி
மிகவுண்டு ; மேலும் மேலும்
பொங்குமயல்[11] வாரிச் சுழிப்பட்(டு) அலைந்(து,) ஒரு
[12]புகர்க்கரி செய் உதவி யதனல்,
[13]போதப் புணர்ந்தவள் சொல் குற்றேவல் முற்றும்
புரிந்(து,) உவகை பொலியுந்தொறும்
குங்குமத் தோள்கொட்டி ஆடும் அதி காமுகா !
கொட்டியருள் சப்பாணியே !
குளிர்பொழில் பழனியில் வளர்குமர குருபரா !
கொட்டியருள் சப்பாணியே !

*(1) கங்குல் இன்றிய - இருளே இல்லாத. (2) கடவுள்- இந்திரன். (3) யானை தரு கன்னி - தேவயானை. (4) ககன முனி - நாரதர். (5) கடுக் என்று - விரைந்து. (6) கரும் கானகம் - இருண்ட காடு. (7) வெம் குறவர் - கொடிய வேடுவர். (8) ஏனல் - தினைப்புனம். (9) சிறுமியை - வள்ளி நாச்சியாரை. (10) தினைப் பிண்டி - தினைமாவு. (11) மயல்வாரி- மோக சாகரம். (12) புகர்க்கரி - யானையான கணபதி. (13) போத - பெரிதும்.* (4)

36. [1]சீலத் தபோதனர்கள், ஆநந்தம் மீறித்
[2]திருக்கணீர் அருவி கொட்டத் ;
தேவர்,கின் னரர்,கருடர், கந்தருவர் ஆதியோர்,
செங்கைமலர் மாரி கொட்டப் ;

[3]பாலத்தின் நாட்டம் படைத்தவ னே(டு,)உமையும்
பழிக்கரும் நல் உவகை கொட்டப் ;
[4]பருவதா காரப் பெரும்பூத கணநாதர்
[5]பல்லியம் கொட்ட ; முற்றும்
[6]ஆலத்(து) எழும்தகுவர் நெஞ்சகம் பறைகொட்ட ;
அரமகளிர் வீணை கொட்ட ;
அறநீதி மன்னர்மனை தோறு முரசம் கொட்ட ;
[7]அசலந் தொறும் களிப்பால்
கோலக் குறச்சிறுவர் [8]தொண்டகம் கொட்ட, நீ
கொட்டியருள் சப்பாணியே !
குளிர்பொழில் பழனியினில் வளர்குமர குருபரா !
கொட்டியருள் சப்பாணியே !

*(1) சீலத் தபோதனர்கள் - அக ஒழுக்கப் பேறுடைய அருந்தவ முனிவர்கள். (2) திருக்கணீர் - அன்புக் கண்ணீர். (3) பாலத்தில் நாட்டம் - நெற்றியில் ஒரு கண். (4) பருவ தாகார - மலைபோன்ற தோற்றம் உள்ள. (5) பல் இயம் - பல வகை வாத்தியங்களை. (6) ஆலத்து எழும் - ஆலகால விஷம் போல் கொடுமையும் நிறமும் கொண்டு எழுந்த. (7) அசலந் தொறும் - மலை நிலம் எங்கும். (8) தொண்டகம் - தொண்டகம் எனும் வாத்தியம்.* (5)

*வேறு*

37. பலபல் மடவார் விளையாட்டும், [1]பங்கேருகமும், குவலயமும்,
பவளச் சிறுகால் [2]ஓதிமமும், [3]பருவால்
வளையும், [4]கயல்திரளும்,
[5]அலகில் பரிமா எனப்பாயும் அலையின் [6]குழுவும், நவமணியும்,
அறிவிற் பெரியார் அநுட்டானம் அநந்த
விதமாச் செயுமழகும்,

[7]உலவும்கவரி, சிலபுனல்புக்(கு) [8]உழப்பும் வனப்பும், இவையனைய
ஓராயிரம் சீர் உள்ளனவும், ஒழியா(து)
என்றும் [9]தடம்தோறும்
குலவும் பழனிப் பதிமுருகா ! கொட்டி யருளாய் சப்பாணி !
கொல்லா விரதர்க்(கு) அருள்குமரா ! கொட்டி
யருளாய் சப்பாணி !

*(1) பங்கேருகமும் - தாமரையும். (2) ஓதிமமும் - அன்னமும். (3) பருவால்வளையும் - பருத்த வெண்சங்கும். (4) கயல் திரளும் - சேல்மீன் கூட்டமும். (5) அலகில் பரிமா - அளவிலாத குதிரைகள் எனும்படி. (6) குழுவும் - கூட்டமும். (7) உலவும் கவரி - உலாவும் கவரி மான்கள். (8) உழப்பும் - (நீளக்) கலக்கும். (9) தடம் - பொய்கை.* (6)

38. நாறு மலர்ப்புங் [1]கவன்சொல் மறை நான்கும் ;
கயிலைக் கிரிக் கடவுள்
நவிலும் [2]எழுநான்(கு) ஆகமமும் ; நளிர் தென்
பொதிய மலைக் குவட்டில் ;[3]
ஏறும் [4]குறுமா முனிபகர்நூல் எண்ணில்
பலவும் ; தனி நாவாய்[5]
இடத்தில் பிறந்தான், காவியங்கள் [6]ஈரொன்
பதும்,நல் கீரன்நுவல்
[7]ஆறுபகுதிப் பனுவல் ஒன்றும், [8]அருணைப்
புலவோன் திருப்புகழும்,
[9]அணிப்போ ரூரன் முதலினர்சொல், அருமைக்
கவிகள் அளவிலவும் ;
கூறும் திருவா வினன்குடியாய் ! கொட்டி
யருளாய் சப்பாணி !
கொல்லா விரதர்க்(கு) அருள்குமரா ! கொட்டி
யருளாய் சப்பாணி !

(1) புங்கவன் - பிரமன். (2) எழுநான்கு - இருபத்தெட்டு. (3) குவட்டில் - உச்சியில். (4) குறுமா முனி - அகத்தியர். (5) நாவாய் இடத்தில் பிறந்தான் - படகில் பிறந்த வியாசர். (6) ஈரொன்பதும் - பதினெண் புராணங்களும். (7) ஆறு பகுதிப் பனுவல் - ஆறுபடை வீடு கூறும் திருமுருகாற்றுப் படையும். (8) அருணைப் புலவோன் - அருணகிரிநாதர். (9) அணி போரூரன் - திருப்போரூர்ச் சிதம்பர ஸ்வாமிகள். (7)

வேறு

39. [1]நிறைபெறு மகளிரும, [2]வயமலி புருடரும்
[3]நெய்த்த மலர்ச்சோலை
நிலவிய அமரரும், முனிவரும் மனமிக
நெக்குரு கப்பாடும்
மறையவர் களும்,அர சினர்களும், வணிகரும்,
[4]மன்பணை யிற்சாலும்
வகைபடு பயிரிடு [5]தொழிலினர் களும்,நுவல்
மற்றை நலத்தோரும்,
முறைவழி [6]வழுவற ஒழுகலின் அருள்நெறி
[7]முற்றுத லுற்(று,)ஆசு[8]
முழுமையும் [9]இரிதர, [10]மகபதி நகரமு
[11]தல்சொல் வனப்பேர் வெல்
குறைவறு வளமுறு பழனியின் இறையவ !
கொட்டுக சப்பாணி !
குறுமுனி பரவிய சரவண பவகுக !
கொட்டுக சப்பாணி !

(1) நிறை - மன நிறை வுடைமை ; கற்பு எனினுமாம். (2) வயம் மலி - (தம் உணர்வைச் சிதறவிடாமல்) வசப்படுத்தி நிறைவு கண்ட; வெற்றி நிறைந்த எனினுமாம். (3) நெய்த்த - பசப்புடைய ; குளிர்ந்து பசுமையான எனலுமாம். (4) மன்

பணையில் சாலும் வகைபடு-கம்பீரமான வயல்களில் நிறைந்த பலவகை. (5) தொழிலினர்களும் - வேளாளரும். (6) வழுவற-பழுதே யில்லாதபடி. (7) முற்றுதல் உற்று - நிரம்பி. 8) ஆசு - களங்கம். (9) இரிதர - கெட. (10) மகபதி - இந்திரன். (11) முதல் சொல் வனப்பு ஏர் வெல்-முதன்மையானது என்று சொல்லும் கம்பீரமான அழகை வென்ற. (8)

வேறு

40. [1]படவாள் அர(வு)ஆ யிரகோ டியும்,ஆ
பத்தடை யக்கூவும்
பசுமா மயில்வா கனம்ஏ றியவா!
பற்பல் மலைக் கோயில்
இடமே [2]கதியா விழைவார் எதிர்போய்,
இச்சைய ளித்தாளும்
இளையாய்! குறமான் மகிழ்கா வலவா!
[3]எற்றும் உரல் கால்கொள்
[4]கடமா மகவான் மகள்சேர் கணவா!
[5]கட்க வலித் தீரர்
[6]கணம்நா டியதோர் துணைவா! [7]இணைதீர்
கட்டழ குக்காரா!
[8]குடவால் வளையூர்[9] வயலூர் முருகா!
கொட்டுக சப்பாணி!
குமரா! குழகா! குரவா! குகனே!
கொட்டுக சப்பாணி!

(1) படவாள் அரவு - படமெடுக்கும் ஒளியுடைய பாம்புகள். (2) கதியா - அடைக்கல நிலயமாக. (3) எற்றும் உரல் கால் கொள் - மோதும் வலிமை கொண்ட கால்களை யுடைய. (4) கட மா மகவான் - மதயானை மேல்வரும் இந்திரன். (5) கட்கம் - வாள். (6) கணம் - கூட்டம். (7) இணைதீர் -

ஒப்பு இல்லாத. (8) குடவால் வளை - வளைந்த வெண் சங்கு. (9) ஊர் - ஊர்ந்து செல்லும். (9)

வேறு

41. நற்றவம் உற்றவ ரைப்,பழி செப்புதல்
[1]நட்டார், கெட்டேக;
[2]நக்கனை, [3]அச்சுத னைக்,[4]கம லத்தனை
[5]நத்தார் கட்(கு,)[6]ஊறு
முற்ற இரக்கம் இலர்க்(கு)இடர் மிக்குற,
மொய்த்தா ரில்பாடும்
முத்தமிழ் [7]விற்பனர் முன்கலி [8]அச்சுற,
[9]முத்தே ஒப்பாய
[10]பற்றகை பெற்றவர் இட்டம யக்கிடை
பட்டேனுக்(கு) ஆசில்
பத்திய ளித்தது மெய்ப்பட மிக்கசெ
பத்தார் கள்சூழ்பல்
குற்றம் அறுக்கும் முழுக் கருணைக் குக!
கொட்டாய் சப்பாணி!
கொற்றமு டைப்பழ னிக்கிரி வித்தக!
கொட்டாய் சப்பாணி!

(1) நட்டார் - தொழிலினர். (2) நக்கனை - சிவபிரானை. (3) அச்சுதனை - திருமாலை. (4) கமலத்தனை - பிரமனை. (5) நத்தார்கட்கு - விரும்பி அணுகாதவர்க்கு. (6) ஊறு முற்ற - இடையூறு முதிர. (7) விற்பனர் - புலவர்கள். (8) கலி - கலிபுருடன். (9) முத்தே ஒப்பாய - முத்துப் போன்ற. (10) பல் தகை பெற்றவர் - பற்களின் வரிசை யுடைய பாவையர். (10)

# 5. முத்தப் பருவம்

(மழவை. சுப்ரமண்யக் கவிராயர் அருளிய)

## திருமயிலாடுதுறைப் பிள்ளைத்தமிழ்

[பதினொன்றும் மாதத்தில் நிகழ்வது இது.]

---

42. மந்தரம் சுழலாது ; வாசுகி உடம்பெலாம்
மற்றும் தழும்புருது ;
வானவர்கள் [1]கரதலம் குருதி சேரா(து;) அவுணர்
வன்கையும் சேப்புருது ;
சுந்தரம் மிகுந்திடும் [2]முகுந்தன் [3]அரவிந்தம் நிகர்
துணைவிழி பிதுங்கிடாது ;
சொரிதரளம்[4] எறிதிரை[5] சுருட்டுபால் கடல்,[6]அகடு
சுற்றும் கலங்கிடாது ;
[7]கந்தரத் தினில்எங்கள் கண்ணுதலை, இன்னமும்
கால விஷமே தொடாது ;
கைஒன்றி லேஒன்று [8]வளைதொட் டவர்க்கு[9]வளை
கையிரண்டும் தொடாது ;
[10]செந்துவர்க் கனிவாயின் அமுதம் பெருக்கும் நின்
திருவாயின் முத்தம் அருளே !
செங்கண்மால் மருகனே ! குன்றைவாழ் முருகனே !
திருவாயின் முத்தம் அருளே !

(1) கரதலம் - உள்ளங் கைகள். (2) முகுந்தன் - திருமால். (3) அரவிந்தம் நிகர் - தாமரை போன்ற. (4) தரளம் - முத்துக்களை. (5) எறிதிரை - வீசுகிற அலைகளை. (6) அகடு - நடுவிடம். (7) கந்தரத்தினில் - கண்டத்தில்.

(8) வளை - பாஞ்ச சன்யம். (9) வளை - வளையல்கள் ; இது திருமால் மோகினி வடிவைக் குறித்தது. (10) செந்துவர் - சிவந்த பவளம் போன்ற. (1)

43. [1]சரணமென வந்தவர்க்(கு) ஆதாரம் ஆன இரு
[2]சரணமும் கூப்பி, [3]வேழச்
சருமமும் உடுத்தி,வெம் [4]புலியதள் உடுத்திடும்
[5]தானையும் ஒடுக்கி, [6]நாகா
பரணமும் [7]தாழா(து) எடுத்துச் சுருட்டி, இரு
பங்கயக் கைகள் கட்டிப்,
[8]பரிவர்த்த னக்கால மாமென்ன, மான்மழுப்
பக்கத்தில், [9]அங்கம் மூன்றும்
கிரணவெண் பிறையும், [10]கடுக்கையும், முழங்கு[11]பா
கீரதியும் வீழ்வ(து) என்னக்,
கிளர்தலை குனிந்(து)ஐந்து வாயும் புதைத்து[12]மா
கேசன் திருச்செவிக்குள்
[13]திரணமென அமு(து)ஏழு பிரணவத்தின் உரைசொன்ன
திருவாயின் முத்தம் அருளே !
செங்கண்மால் மருகனே ! குன்றைவாழ் முருகனே !
திருவாயின் முத்தம் அருளே !

(1) சரணமென - அடைக்கலம் என்று. (2) சரணமும் கூப்பி - திருவடிகளையும் ஒருசேர வைத்து. (3) வேழச் சருமமும் - யானைத் தோலையும். (4) புலி அதள் - புலித் தோலை. (5) தானையும - ஆடையையும். (6) நாகாபரணமும் - பாம்பாகிய ஆபரணமும். (7) தாழாது - தாமதியாமல். (8) பரிவர்த்தனம் - பண்டமாற்று. (9) அங்கம் - உறுப்பு. (10) கடுக்கையும் - கொன்றையும். (11) பாகீரதியும் - கங்கையும். (12) மாகேசன் - சிவன். (13) அமுது திரணமென - அமுதம் துளிப்பது போல. (2)

**44.** [1]விண்தலத்(து) உயர்விந்த [2]கிரிதனை யடக்கியகை
விரல்எலாம், தரையில் வைத்து ;
[3]மேதினி வணங்கவே பொதியமா மலைதனில்
மிதித்தகால் விரலை யூன்றி ;
[4]மண்தலம் புனைஆடை என்ன, [5]வளை கடல்உண்ட
மணிவாயும் மௌனம் ஆக ;
மறையவர்கள் உயிர்கொண்ட [6]வாதாபி உயிருண்ட
வயிறெலாம் புழுதி தோயக் ;
குண்டலம் கீழ்விழச் ; செவிதாழ ; இருகரம்
கூப்பித் [7]தரம் புரட்டிக்,
[8]குவ(டு) அனைய இருபுயமும், மார்பும்,மலர் விழியுமே
[9]குவலயத் தா(டு) அழுந்தத் ;
தெண்டனிடு [10]குறுமுனிக்(கு) உபதேசம் அதுசொன்ன
திருவாயின் முத்தம் அருளே !
செங்கண்மால் மருகனே ! குன்றைவாழ் முருகனே !
திருவாயின் முத்தம் அருளே !

*(1) விண் தலத்து - ஆகாயத்தில். (2) விந்த கிரிதனை - விந்திய மலையை. (3) மேதினி - பூமியில். (4) மண்தலம் - நிலவுலகம். (5) வளை - சூழ்ந்த. (6) வாதாபி - இவன் ஒரு அசுரன் ; வில்வலனுடைய அண்ணன். (7) தரம் - தகுதி தோன்ற. (8) குவடு அனைய - குன்று போன்ற. (9) குவலயத்தாடு - நிலத்தில். (10) குறுமுனிக்கு - அகஸ்தியர்க்கு.* **(3)**

**45.** வான்உண்டு[1] கடல்உண்டு திடல்உண்டு கரிஉண்டு
மலைஉண்டு திசைஉண்டு மா
மண்டலமும் அண்டபகிர் அண்டநவ [2]கண்டமும்
[3]வாள்அரவும் உண்டு ; மற்றும்
தான்உண்(டு) அடங்காத கள்ளப் பசிக்(கு,) [4]இபம்
தன்பசிக்(கு) இட்ட சோளம்

தான் என்ன, [5]மான் என்ன, மீன் என்ன, மலர்விழித்
[6]தையல்[7]இதழ் உண்ண வேண்டிக் ;
[8]கானுண்டு, மலையுண்டு [9]அலையுண்டு [10]அரிதென்று
கருதாது, காம வலையில்
கட்டுண்டு, கிழவுருக் கொண்டு, வயி(று) எக்கி, முன்
காட்டி, அவ் வள்ளி யிட்ட
[11]தேனுண்ட தினைமாவை உண்டு[12]தேக் கிட்டநின்
திருவாயின் முத்தம் அருளே !
செங்கண்மால் மருகனே ! குன்றைவாழ் முருகனே !
திருவாயின் முத்தம் அருளே !

*(1) உண்டு-விழுங்கி. (2) நவகண்டமும் - (பரதகண்டம் முதல்) ஒன்பது கண்டங்களும். (3) வாள் அரவும் - ஒளி யுடைய (பாதலப்) பாம்புகளையும் (4) இபம்தன் பசிக்கு- யானைப் பசிக்கு. (5) மான் மருட்சியிலும், மீன் பிறழ்ச்சியி லும் கண்கட்கு உவமை. (6) தையல் - வள்ளி யம்மை. (7) இதழ் உண்ண வேண்டி - அதர பானம் கொள்ள ஆசைப் பட்டு. (8) கான் உண்டு - (இடைவழியில்) காடுளது. (9) அலை யுண்டு - காட்டாறு உளது. (10) அரிது என்று- (கடக்கக்) கஷ்ட சாத்யமானது என்று. (11) தேன் உண்ட - தேன் பெய்து பிசைந்த. (12) தேக்கிட்ட-ஏப்பம் விட்ட.* (4)

46. [1]மன்னுதன் புனல்மூழ்க வருவோர்கள் தீங்கெலாம்,
[2]மாருதத் தூதர் விட்டே
வழிப்பறி பறித்துத் ; [3]தரங்கக் கரங்களால்
[4]மங்கலம் எடுத்தெறிந்து ;
சந்நிதா னத்தில்வரு வோர் ஜன்ம நோய்க்கெலாம்,
[5]தண்துளி மருந்தளித்துச் ;
சாலோக மும்தந்து, சாமீப மும்தந்து ;
தண்புனல் படிந்த பேர்க்குப்

பன்னிரு கரங்களும், பன்னிரு புயங்களும்,
பன்னிரு மலர்க் கண்களும்,
[6]பன்னிருவர் போல்மகர குண்டலம், இலங்குகுழை
பனிரண்டு, [7]மூவிரண்டு
சென்னியும் தருசரவ ணப்பொய்கை [8]ஆதிபா!
திருவாயின் முத்தம் அருளே!
செங்கண்மால் மருகனே! குன்றைவாழ் முருகனே!
திருவாயின் முத்தம் அருளே!

*(1) மன்னு தன் - தன்னிடத்தில் பொருந்திய. (2) மாருதத் தூதர் விட்டே - குளிர்ந்த காற்று எனும் தூதரை யேவி. (3) தரங்கக் கரங்களால் - அலைகளாகிய கைகளால். (4) மங்கலம் - (பொன், பூ, அகில், முத்து முதலிய) மங்கலப் பொருள்களை. (5) தண் துளி - குளிர்ந்த (நீர்த்) துளி. (6) பன்னிருவர் போல் - பன்னிரண்டு சூரியர்போல். (7) மூவிரண்டு சென்னியும் - ஆறு திருமுடியும். (8) ஆதிபா - அதிபனே.* (5)

47. [1]அவ்வென்று படரும் [2]கதிர்க்கற்றை தோய,விண்
ஆர்ந்து சூல் [3]கொண்ட [4]கொண்மூ.
அளித்தவெண் முத்தும்; [5]துளித்திவலை வேண்டி,[6]அங்
காந்த நத்(து) ஈன்ற முத்தும்;
[7]தெவ்வென்று சிங்கத்(து) இளம்கன்(று) எழும்பிச்,
[8]சினத்துத் தகர்ந்(து) ஒடித்த
[9]சிந்துரக் கோட்டில் தெறித்தவெண் முத்தமும்;
செங்கரும்(பு) ஈன்ற முத்தும்;
[10]சவ்வென்று துளையுண்டு, விலையுண்டு, கடையுண்டு,
[11]தட்டுண்டு திரியும்; அல்லால்,
[12]தண்துளி பெருக்கும்நின் மழலைவாய் முத்தெனத்
தரும்இன்பம் அருள வருமோ?

[13]செவ்வென்று [14]மதுரித்(து,) நறுமணம் பூரித்த
திருவாயின் முத்தம் அருளே !
செங்கண்மால் மருகனே ! குன்றைவாழ் முருகனே !
திருவாயின் முத்தம் அருளே !

(1) அவ் - ஒலிக்குறிப்பு. (2) கதிர்க் கற்றை - சூரிய கிரணம். (3) சூல் - கருப்பம். (4) கொண்மூ - மேகங்கள். (5) துளித் திவலை வேண்டி - துளிக்கும் மழைத் துளிகளை விரும்பி. (6) அங்காந்த நத்து - வாய்திறந்த சங்குகள். (7) தெவ்வென்று - பகை என்று கருதி. (8) சினத்து- கோபித்து. (9) சிந்துரக் கோட்டில் - யானைத் தந்தத்தில். (10) சவ்வென்று - உபயோகமற்றதாய். (11) தட்டுண்டு - குற்றம் உடையதாய். (12) தண்துளி - உமிழ்நீர்த் துளி. (13) செவ்வென்று-சிவந்து. (14) மதுரித்து-தித்தித்து. (6)

**48.** முளைத்துக் கிளைத்(து) இலைகள் பச்சைப் பசேர்என்று,
[1]முதண்ட முகடு முட்ட,
மூவுல(கு) அளக்கவரு [2]நெடியமால் என வளரும்
மூங்கில் [3]குழாத்தின், இன்பம்
விளைத்துப் பிறந்தவெண் முத்தமும் ; [4]சரசமும் ;
[5]விரும்பிலோர் [6]வெடிவு மாற
[7]வேரிப் பசும்பொன் செழுங்கமல [8] நெட்டிதழ்
விரிந்தவெண் முத்தும் ; ஏங்கிக்
களைத்துத் திகைப்ப நேர்ந்(து,) [9]அம்செய்(து)ஒளிர்[10]கான்றிடும்
[11]கையேற, [12]அகடு கிழியக்,
கடல்முகட் டினில் எழுந்(து,) உலகம்ஒரு மூன்றினும்
கதிர்வீசு நன்முத்தமும் ;
[13]துளைத்து விலை கட்ட[14]மிளிர்[15]கட்டாணி முத்தமே ;
சுடர்வாயின் முத்தம் அருளே !
சோதிமலை நிகரான [16]தோகைமலை ஆதிபா !
சுடர்வாயின் முத்தம் அருளே !

(1) மூதண்டம் - பேரண்டம். (2) நெடியமால் - திருமால். (3) குழாத்தின் - கூட்டங்களிலிருந்து பிறந்த. (4) சரசமும் - உலகியல் புணர்வும். (5) விரும்பிலோர் - விரும்பாதோர். (6) வெடிவு மாற - வெடு வெடுப்பு மாறுதல் அடைய(ச்செய்யும்). (7) வேரி - மணம் (கமழ்). (8) நெட்டிதழ் - நீண்ட இதழ்களிலிருந்து. (9) அம் - அழகு. (10) கான்றிடும்-பரப்பும். (11) கை ஏற-ஒலி மிக. (12) அகடு கிழிய - நடுவிடம் பிளக்க. (13) துளைத்து விலை கட்ட - ஊடுருவி விலை மதிப்பிட. (14) மிளிர் - (அவைகளைவிட் மிக்குப்) பிரகாசிக்கின்ற. (15) கட்டாணி - மிகச் சிறந்த. (16) தோகைமலை - மயூரகிரி. (7)

49. அருகிருக்கும் [1]பரிநடத்தும் அரசன்,
முத்தம் தருகவே
அரைவடக் கிண் கிணி ஒலிக்கும்,
அழகன் முத்தம் தருகவே
ஒரு [2]கிரிக்(கு) அங்(கு) [3]அயில் விடுக்கும்,
[4]உசிதன் முத்தம் தருகவே
[5]உபய பத்மம் [6]தரும் எனக்கும்,
ஒருவன் முத்தம் தருகவே
தருகடப்பம் [7]தொடைதரிக்கும், [8]சரசன்
முத்தம் தருகவே
தமிழ்உமைக்கும் [9]சரநதிக்கும், தனயன்
முத்நம் தருகவே
[10]குருகிரிக்கும் [11]குறமயிற்கும், [12]குரிசில்
முத்தம் தருகவே
குறைவறக் குன்றையில் இருக்கும்
குமரன் முத்தம் தருகவே.

(1) பரி - மயில். (2) கிரிக்கு - கிரவுஞ்ச மலைக்கு. (3) அயில் - வேல். (4) உசிதன் - சமயோசிதமானவன்.

(5) உபய பத்மம் - இரு திருவடிகளை. (6) எனக்கும் தரும் எனக் கூட்டுக. (7) தொடை - மாலை. (8) சரசன் - இன்ப ஆடலை யுடையவன். (9) சரநதிக்கும்-கங்கைக்கும். (10) குரு கிரி - ஸ்வாமிமலை. (11) குறமயில் - குறவர்குல மயிலான வள்ளியம்மை. (12) குரிசில் - தலைவன். (13) குன்றை - மயூர கிரி. (8)

**50.** தாய்என்(று) எடுத்துத், தடம்புயம் சேர்க்க,ஒரு
தவமதனை, [1]வன்னி யுடைய
சன்னிதா னம்செய்து, வேள்வி
ஆகுதி, அவன் தன்பேரி லேகவர்ந்து,
போய் என்றும் இரும் என்று, முனிவர்இரு மூவரும்
புணரும் மடவாரை அகலப்,
பொற்கொடிகள் [2]இருமூவர் தமது வடிவாய்,அன்பு
பூண்டனம், வன்னி யதனுல் ;
[3]ஆய் என்று, யாம் உன்னை நம்பி வந்தோம் என்ன,
அபயம் கொடுத்து, வானில்
[4]ஆகண்டலன் மகிழ, அறுமீன் எனப்பதித்
தவர்முலைப் பாலும் உண்டு ;
சேய் என்று, மணிமார்பில் விளையாடும் ஒருபிள்ளை
திருவாயின் முத்தம் அருளே !
செங்கண்மால் மருகனே ! குன்றைவாழ் முருகனே !
திருவாயின் முத்தம் அருளே !

(1) வன்னி - அக்கினி. (2) இருமூவர் - ஆறு முனிவர் பத்தினியர். (3) ஆய் - தாய். (4) ஆகண்டலன்-இந்திரன் ; அக்கினிக் கடவுள், ஆறு பொறிகளைத் தாய்போல் தாங்கிய தவத்தினன் என்று எண்ணி, அந்த அக்கினியையே சந்நி தானமாகக் கொண்டு, வேள்வியில் தரும அவிசை அந்த அக்கினி முகமாகவே தான் ஏற்கிறுன் இந்திரன் என்பது, முதல் பகுதியில் உள்ள பொருள்.

சென்று என்றும் பணி செய்து இரும் என்று, (சப்த ரிஷிகளில் வசிட்டர் நீங்கலாக உள்ள) ஆறு முனிவர்கள் தம் தம் துணைவியரை அனுப்பி வைக்க, கிருத்திகை வடிவான அந்த ஆறு மாதரும், முருகா! உனது ஆறு பொறி சொரூபம் கண்டு அகம் மகிழ்ந்தோம்; நலம் சிறந்த ஆய் வடிவில், உன்னைத் தாயென்று சரணடைந்தோம்; அருள் செய் எனத் துதிக்க, அவர் தம் பால்பருகி விளையாடுவோனே என்பது, பின்னைய அடியிலுள்ள செய்தி. (9)

**51.**

சுடர்முகக் [1]குஞ்சர முகத்தான் துணைவன் முத்தம் தருகவே;
[2]சுரர்பதிக்(கு) அன்று அரசளிக்கும் சுகுணன் முத்தம் தருகவே!
[3]வடதருக் கொம்(பு) உறை[4]அரிக்கும் மருகன் முத்தம் தருகவே!
[5]வடகிரிக்குன் றினில் இருக்கும் மதலை முத்தம் தருகவே!
கடலடக்கும் [6]கெடி செலுத்தும் [7]கடகன் முத்தம் தருகவே!
கரதலக் கங் கணம் ஒலிக்கும் [8]கடகன் முத்தம் தருகவே!
[9]கொடியிரிக்கும் [10]குறமயிற்கும் குரிசில் முத்தம் தருகவே!
குறைவறக் குன் றையில் இருக்கும் குமரன் முத்தம் தருகவே!

(1) குஞ்சர முகத்தான் - யானை முக கணபதியின். (2) சுரர் பதிக்கு - தேவேந்திரனுக்கு. (3) வடதருக் கொம்பு - திருவாலங் காட்டு ஆலமரக் கிளை; கந்தபுராணக் கயமுகன் உற்பத்திப் படலத்தில் இவ்வரலாறு உளது. (4) அரி - திருமால். (5) வடக்கிரிக் குன்று - கயிலை; கந்தகிரி யெனினுமாம். (6) கெடி - ஆதிபத்தியம். (7) கடகன் - பூத கணப் படையாளன். (8) கடகன் - நடுவன்; குறிஞ்சி நிலத்தன் எனலுமாம். (9) கொடி யிரிக்கும் – பறவைகளை (தினை மேயாதபடி) விரட்டும்; பூங்கொடியை நாண வைக்கும் இடையை யுடைய எனினுமாம். (10) குறமயில் - வள்ளியம்மை. (10)

---

# 6. வருகைப் பருவம்

(கந்தப்ப தேசிகர் அருளிய)

# திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்

[இளநடை எய்தும் பருவம்; இது பதின்மூன்றும் மாதத்தில் நிகழ்வது.]

---

**52.** [1]கண்ணனும், [2]கனகநிற வண்ணனும், [3]திருநுதல்
கண்ணனும் [4]ஒருங்கு உறைதல்போல்,
[5]கருமலை யிடத்துறச், செம்மலை வலத்துறக்,
கவினும் வெண் மலை யிடையதாய்ப்;
[6]பண்ணமரும் [7]நந்திநதி [8]புடைசூழ, இடையிடைப்
[9]பைஞ்சுனை [10]வயங்க, [11]மீச்செல்
[12]பயோதரம் [13]வயா நலிவுறக்,கொடிகள் [14]தாக்கல், பல
பாவையர் மருத்துவம் செய்(து,)
[15]உள்நிலவு நீர்மக(வு) உயிர்த்திட, விலாப்புறத்(து)
[16]ஒள் கரத்தால் வருடல்போல்,
ஓங்குமுடி மேல் ஊன்று [17]வெள்ளிவீழ் அன்ன மழை
ஒழுகுநீர் அருவி [18]யிழிதல்,
தண்ணிலவு [19]கல்லார மாலையணி மாண்பு நிகர்
தணிகை நாயகன் வருகவே !
தடாமலப் பிணியெனை அடாது சிற் சுகமருள்
சடானனக் குரு வருகவே !

*(1) கண்ணனும் - திருமாலும். (2) கனக நிற வண்ணனும் - பிரமனும். (3) திருநுதல் கண்ணனும் - சிறந்த நெற்றிக் கண்ணுடைய உருத்திரனும். (4) ஒருங்கு உறைதல் போல் - ஒரு சேர வீற்றிருத்தல் போல். (5) தணிகை மலையின் தென்பாகம் கருநிறம்; இதைப் பிண்ணாக்கு மலை என்பர்; வடபாகம், கருமை கலவாத செம்மை நிறம் : இதைப் பச்சரிசி*

மலை யென்பர்; இரண்டன் நடுவில் வெண்மலைபோல் முருகன் உளன். தணிகை மலையைக் குளத்திடம் இருந்து நோக்கினல், மலையின் முக்குவடு தோன்றும். அவைகள் முருக பிரானுக்கு மாலை யிட்டதுபோல் தோன்றும் அருமையே அருமை. இதை, "கருமலை யிடத்துறச் செம்மலை வலத்துறக் கவினும் வெண் மலை யிடையதாய்" என்றார். (6) பண் அமரும் - இசை யமைதி யுடைய. (7) நந்திநதி - நந்தியாறு. (8) புடை - (மலையின் வடப்) பக்கத்தில். (9) பைஞ்சுனை - இந்திர தீர்த்தம், நாரத தீர்த்தம், அகத்திய தீர்த்தம், பிரம தீர்த்தம் முதலிய மலைமேல் உள்ள சுனைகளும், மலையடியில் உள்ள ஏழு சுனைகளும். (10) வயங்க - (என்றும்) விளங்க. (11) மீச்செல் - விண்ணில் சஞ்சரிக்கும். (12) பயோதரம் - மேகங்கள். (13) வயா நலிவுற - கருப்ப வேதனை யடைய. (14) தாக்கல் - தாங்கல் ; தாக்கலுமாம். (15) உள் நிலவு நீர் மகவு உயிர்த்திட - (மேகக்) கருவுள இருந்த (மழை) நீராகிய மகவைப் பெற. (16) ஒள் கரத்தால் வருடல்போல் - ஒளியுள கைகளால் தடவிக் கொடுத்தல் போல. (17) வெள்ளி வீழ் அன்ன மழை - வெள்ளிக் கம்பிகளை வீழ்த்தியது போன்ற மழை. (18) இழிதல் - (மலையி லிருந்து) இறங்கி வருதல். (19) கல்லார மாலை - நீலோற்பல மாலை. (1)

53. [1]நாவலம் பெயர்புனை[2]பொலந்தக(டு) அணிந்ததென,
[3]நனையிதழ் முறுக்(கு) அவிழ்ந்து ;
[4]நளிர்வண்டு[5]உணு(து,) ஒளிர் விளக்கேற்றி வைத்ததென,
நறுமலர்கள் துறு செண்பகக்
[6]காவில்,அந் தணர் புரியும்[7]ஓமஅங் கியில்நிமிர்
கரும்புகைப் படலம்[8]மீப்போய்,
[9]கடவுளர்க்(கு) ஆயுளை வளர்த்து, முகில் மேனிபொதி
காட்சியால்[10]களி துளும்பித் ;
[11]தூவுமின் குல்வுநகை வாய்நவின்(று) ஊறி,[12]மதி
தோறும் மும் மாரிபொழி நீர்,

துன்னுதண்[13]பணையில் வளர்[14]செஞ்சாலி ஓங்குகதிர்[15]
சூரியன் பரிகள்[16]தினவே ;
[17]தாவில்இன் புறுகுடிகள்[18]மேவுதண்[19]அடைகுலவு
தணிகை நாயகன் வருகவே !
[20]தடாமலப் பிணியெனை[21]அடாது சிற்[22]சுகமருள்
சடானனக் குரு வருகவே !

(1) நாவலம் பெயர் புனை - நாவலந் தீவின் பெயரை ஏற்ற. (2) பொலம் தகடு - ஜாம்பூநதப் பொன் தகடு. (3) நனையிதழ் - (தேறல்) நனைந்த இதழ்களை யுடைய. (4) நளிர் வண்டு - குளிர்ந்த வண்டுகள். (5) உணாது - உண்ணாமல்; செண்பக மலர்களில் வண்டுகள் மொய்ப்பதில்லை என அறிக. (6) காவில் - சோலையில். (7) ஓம அங்கியில் - ஓமத் தீயில். (8) மீப்போய் - மேல் சென்று. (9) கடவுளர்க்கு - தேவர்கட்கு: (10) களி துளும்பி - களிப்பு மிக்கு. (11) தாவு மின் குலவு நகை வாய் நவின்று உரறி -நகைமுகமான மின்னலை வீசி, பேசு முகமாக இடி யிடித்து. (12) மதிதோறும் - மாதந்தோறும். (13) தண்பணையில் - குளிர்ந்த வயல்களில். (14) செஞ்சாலி - செந்நெல் பயிரில். (15) கதிர் - நெல் கதிர்களை. (16) தினவே- தின்னவே. (17) தாவு இல் - குற்றம் இல்லாத. (18) மேவும் - விரும்பி வாழும். (19) தண் அடை - பச்சிலைகள். (20) தடா மலப் பிணி - தடைபடாத மல நோய். (21) எனை யடாது - என்னை யடையாதபடி. (22) சிற்சுகம் - பேரின்பம். (2)



54. [1]ஆசினியின் முள்புறக் கனிபழுந்(து,) [2]ஒண்பு...
அதிர்ந்திட வெடித்த[3]விடரில்,
அவிர்சுளை[4] விரிந்து,[5]நறை ஒழுகுமணம், [illegible]நித்தம்
அளவுகால்[6]வழியின் ஓடி,
[7]முசுவண் டினம்[8]அளவி, மொய்த்த நிதியின் [illegible]யல்
முன்கண்டு, கவரும்[9]வறியோர்

முறைமைகள் தெரித்திடும் சாரலுறு சோலைகளின்,
முதிர்[10]கறிக் கொடியின் மிளகைக்
[11]கூசுகரும்[12]இளமந்தி தின்றழுதல் கண்டு,[13]வன
கோடரம் தேனின் அடையைக்
கொண்டு வந்(து,) அதனுல் இடைப்பிழிந் திடலும், மகிழ்
கூர்ந்து விளை யாடு[14]பணைசூழ்
[15]தாசரதி ஆசிரியன் ஆகி யுயர் வாழ்வுதரு
தணிகை நாயகன் வருகவே!
தடாமலப் பிணியெனை அடாது சிற் சுகமருள்
தணிகை நாயகன் வருகவே!

(1) ஆசினி - பலா ; புறத்தில் முள்களை யுடைய (வேர்ப்) பலாப்பழம் பழுத்து என்க. (2) ஒண்புவி - ஒளியுடைய நிலம். (3) விடரில் - (நிலப்) பிளப்பில். (4) சுளை - பலாச்சுளை. (5) நறை - தேன். (6) கால் வழியின் - வாய்க்கால் வழியே. (7) மூசு - மொய்த்த. (8) அளவி-கலந்து (9) வறியோர் - ஏழைகள். (10) கறிக் கொடி - மிளகுக் கொடி. (11) கூசு - (உடல்) கூசிய. (12) இளமந்தி - குட்டிக் குரங்கு. (13) வனகோடரம் - (தாயான) காட்டுக் குரங்கு. (14) பணை - மருதநிலம். (15) தாசரதி ஆசிரியன் - தசரதன் தநயனை இராமனுக்கு உபதேசகுரு; இவ் வரலாற்றைத் தணிகைப் புராணத்திற் காண்க. (3)

55. [1]கானத்தை ஒத்தபைங்[2]கதலியின்[3]புலியடிய
காய்க்குலை அறுத்து,[4]மீப்போய்
கமுகிளம் பாளைமடல்[5]கீறி,[6]முப் புடையதெங்
கம்பழம் உதிர்த் தெழுந்து,
வானத்(து) அகட்டைப் பிளந்துமழை சிதறி,யுயர்
[8]மதியினுறு மானை முட்டி,
[9]வான மீனைச் சினந்(து,) ஆகாய கங்கை யிடை
வளர்சுறவின் [10]முள் தகர்த்து,

[11]கூனத்தை ஒத்த[12]கண் டத்(து)அரம் பையர்செவிக்
[13]குழை மகரமும் கிழித்துக்
[14]கோளகை யிடித்துப்[15]புறக்கோத்த நீரில்
குதிக்கும் இள வாளை[16]உகளும்
[17]தானத்தி ஞெடும், அருவி நீராறு பாய வயல்
தணிகை நாயகன் வருகவே!
தடாமலப் பிணியெனை அடாது சிற் சுகமருள்
தணிகை நாயகன் வருகவே!

*(1) கானத்தை ஒத்த - காடுபோல் அடர்ந்த. (2) கதலியின் - வாழையின். (3) புலி யடிய - புலிக்கால் போன்ற (உரம் உடைய). (4) மீப்போய் - மேல் தாவி. (5) கீறி - கிழித்து. (6) முப்புடைய - முதிர்ந்த. (7) வானத்து அகட்டை - மேக நடு இடத்தை. (8) மதியினூறு மானை - சந்திரனில் உள்ள (களங்கமான) மானை. (9) வான மீனை - வானத்தில் உள்ள நட்சத்திரங்களை. (10) சுறவின் - சுறுமீனின். (11) கூனத்தை ஒத்த - வளைந்த சங்கு போன்ற. (12) கண்டத்து அரம்பையர் - கழுத்தையுடைய மாதர்களின். (13) குழை மகரமும் - மகர மீன் வடிவான குழையையும். (14) கோளகை- அண்ட கோளத்தை. (15) புறம் கோத்த - (அண்டப்) புறத்தில் இருந்த. (16) உகளும் - பிறழும். (17) தானம் - இடம்.* (4)

56. [1]வாள்தடம் கண்[2]செறி[3]உழத்தியர்,[4]சரோருக
மலர்க்களை எடுத்தருந்தி;
[5]மருமலர்க் கைக்கோப் புடன்[6]குரவை யாடும்ஒலி,
[7]மஞ்சின் ஒலியைப் [8]புடைப்ப;
[9]நாட்டரும் சுமைகள்தரு[10]தொழுவரைப் போர்மேல்
[11]நயந்(து) இவர்ந்(து) ஏறும் உழவர்
[12]நாவலோ என்றுகூ விளிகொளும்[13]சும்மை,அலை
[14]நரலையைத் தட்ப, வயலின்

[15]ஈட்டரும் [16]கண்தரளம் உதிர்கரும் பைத்தறித்(து)[17]
[18]ஏந்திரத்(து) இட்டு, [19]மள்ளர்
எறியும்[20]முள் கோல்கொடு[21]கடாவைத்[22]தெழிக்கும் ஒலி,
இடி ஒலியை மாற்ற ; அணிதோல்[23]
தாள்துணைச்[24]செஞ்சூட்ட அனம் உலவு[25]பண்ணைசூழ்
தணிகை நாயகன் வருகவே !
தடாமலப் பிணியெனை அடாது சிற் சுகமருள்
சடானனக் குரு வருகவே !

(1) வாள் - ஒளி. (2) செறி - நிறைந்த. (3) உழத்தியர் - பள்ளப் பெண்கள். (4) சரோருக மலர்க் கள்ளை எடுத்து அருந்தி - கமல மலர்களில் இருந்த கள்ளை எடுத்துப் பருகி; கள்ளை யென்பது களை என ஆயது. (5) மருமலர்க் கை கோப்புடன் - மணம் கமழ் மலர் போன்ற கைகளைக் கோத்தலுடன். (6) குரவை ஆடும் ஒலி -குரவைக் கூத்தாடும் ஒலி; இது மதுவுண்டவர் போதை கொண்டு ஆடும் மரபை நினைவூட்டியது. (7) மஞ்சின் ஒலியை - மேக கர்ஜனையை. (8) புடைப்ப - (ஒலித்து) மாற்ற. (9) நாட்டரும் சுமைகள் தரும் - நாட்டில் விளைந்த அரிய கட்டுக் கட்டான (நெல்) சுமைகள் தந்த. (10) தொழு வரைப் போர்மேல் - சேர்ந்து பெருகிய மலை போல் உயர்ந்த போர்மேல். (11) நயந்து இவர்ந்து ஏறும் - விரும்பி முறையே ஏறும். (12) நாவலோ என்பது, மகிழ்ச்சியில் உழவர் கூவும் விளி ஒலி. (13) சும்மை - ஒலி. (14) நரலையைத் தட்ப - கடல் ஒலியை அடக்க. (15) ஈட்டு - விளைவிக்கும். (16) கண் தரளம் உதிர் - கணுக்களில் இருந்த முத்துகள் உதிரும். (17) தறித்து - வெட்டி. (18) ஏந்திரத்து - கரும்பாலையில். (19) மள்ளர் - பயிரிடும் குடிகள். (20) முள் கோல் - தாற்றுக்கோல். (21) கடாவை - கரும்பாலையில் கட்டி ஓட்டும் எருமைக் கடாவை. (22) தெழிக்கும் ஒலி - அதட்டி ஓட்டும் ஒலி. (23) தோல் தாள் - தாளில் தோல் உள்ள.

(24) செஞ்சூட்ட அனம் - சிவந்த உச்சிக் கொண்டையை உடைய அன்னப் பறவை. (25) பண்ணை - வயல். (5)

வேறு

57. [1]கன்னல் குதலைச் செங்கனிவாய்
[2]கலச முலைப்பொன்[3]கடைசியர்தம்
[4]கருங்கண் மலரைப்,[5]பூந்தடத்தில்
கமலத்(து)அருகு[6]முறுக்கவிழும்
[7]நன்னர்க் குவளை யென,[8]அறுகால் நாடிப்
[9]பெடையி னொடும் சுழலும் ;
[10]நகைத்தண்[11]தரளப் பொழி[12]நிலவால்,
நறுப்பூங் குமுதம் வாய்விரியும் ;
[13]பின்னல் குழலை மேகமெனப்[14]பெருகும்
களிமா மயில்[15]அகவும் ;
[16]பிறழும் வளைக்கைக் [17]கஞ்சமெனப் பிரியா(து)
[18]அனங்கள் உவந்தேறும்
[19]வன்னப் பணைசூழ் செருத்தணிகை வாழ்வே
வருக வருகவே !
[20]மலையான் உதவும் உமையாள்கண் மணியே
வருக வருகவே !

(1) கன்னல் குதலை - கரும்பு போன்று இனிக்கும் மொழி. (2) கலசம் - கலசம் போன்ற. (3) கடைசியர்தம் - பள்ளப் பெண்களுடைய. (4) கருங்கண் மலரை - மலர்க்கண் களை. (5) பூந்தடத்தில் — பொய்கையில். (6) முறுக்கு அவி ழும் - அரும்பு மலரும். (7) நன்னர் - அழகிய. (8) அறுகால் நாடி - ஆறுகால்களை யுடைய (ஆண்) வண்டுகள் எண்ணி. (9) பெடையினொடும் - பெண் வண்டுகளுடன். (10) நகை - ஒளியுடைய. (11) தண் தரளம் - குளிர்ந்த முத்துகள். (12) நில வால் - ஒளியால்; முத்துக்களின் ஒளியைச் சந்திர ஒளி

யென்று மயங்கிக் குமுதங்கள் மலர்கின்றன என்றபடி. (13) பின்னல் குழலை - (ஜடையாகப்) பின்னிய கூந்தலை. (14) பெருகும் களி-களி பெருகும் என மாற்றுக. (15) அகவும்-குரல் கொடுக்கும். (16) பிறழும் - ஒளி மிளிரும். (17) கை கஞ்சம் என - கைகளைத் தாமரை யெனக் கருதி. (18) அன்னங்கள் என்பது, அனங்கள் என இடை குறைந்தது. (19) வன்னப் பணை - பசுமை நிற வயல்கள். (20) மலையான் உதவும் - மலையரசன் பெற்ற. (6)

58. [1]தென்றல் கொழுந்து தவழ்[2]பொழிலில், செறி[3]பூங்
குழைசேர்[4]வழை நிழலில்,
தினையின் கதிர்தின்(று.) [5]அருவியிழி தீந்தேன்
உண்டு, வாய் குதட்டும்
[6]குன்றக் குகைவாய்[7]மோட்டெருமை,[8]குடநேர்
செருத்தல்[9]உகு தீம்பால்,
[10]குட்டம் பலவும் நிரப்பியிடக் ; குதிக்கும்
[11]கயல்கள்[12]உண்டு,[13]மயல்
துன்றிக்[14]கமல மிசையுறங்கும் ;[15]தூநீர்
மருதம் பற்பல சூழ்
சோலை, உயர்விண் கற்பகப்பூஞ் சோலை
யெனப்பொன் மலர்[16]கஞலும் ;
[17]மன்றல் குவளை[18]அலர் தணிகை வாழ்வே
வருக வருகவே !
மலையான் உதவும் உமையாள் கண் மணியே
வருக வருகவே !

(1) தென்றல் கொழுந்து - பூந்தென்றல். (2) பொழிலில் - சோலைகளில். (3) பூங் குழை - இளந் தளிர்கள். (4) வழை-இது குறிஞ்சிநிலத்தில் வளரும் மரங்களுள் ஒன்று. (5) அருவி இழி - அருவியாகப் பெருகி வரும். (6) குன்றக் குகை - மலைக்குகை போன்ற. (7) மோட்டு எருமை -

பெரிய எருமை. (8) குடம் நேர் செருத்தல் - குடம் போன்ற மடியி லிருந்து. (9) உகு - சிந்திய. (10) குட்டம் - பள்ளமான குட்டைகள். (11) கயல்கள் - சேல்மீனகள் (12) உண்டு (அப்பாலைப்) பருகி. (13) மயல் துனறி - (மிகுதியாகப் பருகியதால்) மயக்கம் மிகுந்து. (14) கமல மிசை - தாமரை மலர் மேல். (15) தூநீர் மருதம் - தூய நீர் வளமுள்ள மருத நிலங்கள். (16) கஞலும் - நிறைந்து மலரும். (17) மன்றல் - மணமுள்ள. (18) அலர் - மலர். (7)

59. பிறப்பும் இறப்பும் எவ்வுயிர்க்கும் பிறழா(து)
அமரும் திறம்போலப்
பெருகும் புனல்பாய் வயல்கள்தொறும்,
பின்னல் கதிரின் செந்நெல் முதிர்ந்(து,)
அறுப்பும் படுப்பும், உழுது பரம்(பு) அடித்து,
விதைத்து நடு நடவும்,
அகலா(து) உழவர்[1]செறிபணை சூழ்ந்(து,)
அழகார்[2]கன்னல் காடுழக்கி,
[3]ஒறுக்கும்[4]மதவா ரணப்பிடியோ(டு) உலவித் திரியும்
[5]சாரல் வளர்ந்(து)
ஓங்கும் மூங்கில் [6]தலையில்,[7]மயில் உலவும்
கழைக் [8]கூத்தரின் அகவி ;
மறப்பில்[9]இறும்பூ துறும்தணிகை வாழ்வே
வருக வருகவே !
மலையான் உதவும் உமையாள்கண் மணியே
வருக வருகவே !

(1) செறி - அடர்ந்த. (2) கன்னல் காடு உழக்கி - கருப்பங் காட்டைச் சிதைத்து. (3) ஒறுக்கும் - அழிக்கும். (4) மத வாரணப் பிடியோடு — மதமுடைய ஆண் யானை பெண் யானையுடன். (5) சாரல் - (மலைச்) சாரலில். (6) தலையில் - உச்சியில். (7) மயில் கழைக் கூத்தரின் உலவி அக

வும் என்றபடி. (8) கூத்தரின் - கூத்தாடிகளைப் போல. (9) இறும்பூதுறும் - வியப்பிற்கு உரிய மகிழ்ச்சி காட்டும். (8)

வேறு

60. [1]தகுவர் முடிகள் உருள, [2]எயிறு[3]தரள
நிரையின் உதிர, [4]வாய்
[5]தடிகள் உதிரம் ஒழுக, வயிறு சரிய,
மலையை[6]அனைய[7]தோள்
தொகுகை நெடிய மிடறு கழல்கள்
தொடைகள் இடைகள் துணியவே,
சுழலும் விழிகள் சிதற, [8]அலகை[9]சுலவு
கழுகு நரிகள் நாய்
[10]புகுத, [11]அயிலை எறியும் இறைவ! புகரில்
தணிகை வரையில் வாழ்
புனித முருக! அரியின் மருக!
[12]புலவர் மலர்கள் பொழிய, நீள்
[13]மகுட நிரைகள் அசைய, விசைய
மயிலும் அசைய வருகவே!
[14]மறுகும் எமது பிறவி யகல
வருக வருக வருகவே!

(1) தகுவர் - அசுரர்களின். (2) எயிறு - பற்கள். (3) தரள நிரையின் - முத்து வரிசைபோல். (4) வாய் - வாய்த்த; பொருந்திய. (5) தடிகள் - தசைகள். (6) அனைய - போன்ற. (7) தோள்களும், பெருத்த கைகளும், நீண்ட கழுத்துகளும், கால்களும், தொடைகளும், இடைகளும் வெட்டுண்ண என்றபடி. (8) அலகை - பேய்கள். (9) சுலவு - வட்டமிட்ட. (10) புகுத - (பிணங்களைத் தின்ன) வர. (11) அயிலை - வேல் படையை. (12) புலவர் - வானோர். (13) மகுட நிரைகள் - ஆறு திருமுடிகள். (14) மறுகும் - கலங்கும். (9)

61. சரண மலர்கள் அசைய,[1]விருது தழுவு
கழலும் அசையவே,
சகல உலகும்[2]விலையில் அறுவை
[3]தழையும் இடையும் அசையவே,
[4]அருண[5]கிரண கடகம் அசைய,
[6]அயிலும் அசைய, அழிவிலா
அழகு புயமும் அசைய,[7]இருவர்
அணையும்[8]மருமம் அசையவே,
[9]முரணும் மகர குழைகள் அசைய
[10]முறுவல் அணியும் அசைய, நீர்
முழுகு தணிகை வரையில் அலரும்
[11]முருகு[12]குவளை அணிகொள் தார்
மருவு முடிகள் அசைய,[13]விசைய
மயிலும் அசைய வருகவே!
மறுகும் எமது பிறவி யகல,
வருக வருக வருகவே!

*(1) விருது தழுவு கழலும் - வெற்றிச் சின்னமான வீரக்கழல் அணிந்த திருவடிகளும். (2) விலை இல் அறுவை - விலை மதிக்க முடியாத ஆடை. (3) தழையும் - மங்கலமாகப் பொருந்தி யிருக்கும். (4) அருணம் - சிவந்த. (5) கிரணம் - ஒளியுடைய. (6) அயிலும் - வேலும். (7) இருவர் - வள்ளி தேவ யானையர். (8) மருமம் - திருமார்பு. (9) முரணும் - (சூரிய சந்திரர்போல் தட்ப வெப்ப ஒளியாக) முரண்பட்டுப் பிர காசிக்கும். (10) முறுவல் அணியும் - புன்னகையும். (11) முருகு - மணமுள்ள; தேன் நிறைந்த எனினுமாம். (12) குவளை அணி கொள் தார் மருவு முடிகள் - குவளை மலராக அழகு அமைந்த மாலை சூடிய திருமுடிகள். (13) விசைய மயிலும் - விரைந்து வரும் மயிலும். (10)*

# 7. அம்புலிப் பருவம்

(குமரகுருபரர் அருளிய)

# முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்

[முருகனுடன் சேர்ந்து விளையாட வா என்று சந்திரனைத் தாதியர் அழைக்கும் இது, பதினைந்தாம் மாதத்தில் நிகழ்வது.]

---

62. [1]மண்டலம் [2]போற்(று)உருவம் [3]அமுதமய [4]மாய்,முழு
மதிக் கடவுள் என வருதலால் ;
[5]வானுறு [6]தலைமடுக் [7]கப்பொங்கும் ஆநந்த
மாக்கட லிடைத் தோன்றலால்
[8]தண்டலில் [9]கொடிச்சிவாய்க் குமுதம் விள்ளக்,[10]கரத்
தாமரை முகிழ்த் திடுதலால் ;
சகல புவனத்திலும் [11]உயிர்ப்பயிர் தழைப்ப,நல்
[12]தண்ணளி சுரந்திடுதலால் ;
[13]துண்டமதி நதியொடு [14]பொதிந்தவே [15]ணிப்பரஞ்
சோதிகண் பொறி யாதலால் ;
[16]தோன்றல் இவன் நின்னை ஒத் துளனுல் ; நினக்கும், ஒரு
துணை இவன் போல் இல்லைகாண் !
[17]அண்டர் அண் டத்தொ(டு)அகி லாண்டம் படைத்தவனெ(டு)
அம்புலீ ஆட வாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே!

(1) மண்தலம் - உலகம்; வட்ட வடிவம். (2) போற்று-துதிக்கும் ; கொள்ளும். (3) அமுத மய உருவம் ஆய் என்று கூட்டுக. (4) முழுமதிக் கடவுள் - முற்றுணர்வுடைய முதல்வன் ; பௌர்ணமி என்னும் பூரண சந்திரன்.

(5) வான் ஆறு - ஆகாய கங்கை ; சிறந்த பல நதிகள் ; (6) தலை மடுக்க - திருமுடியில் தங்க ; தன்னிடம் வந்து கலக்க. (7) பொங்கும ஆநந்த மாக்கடல் - பெருகிய சிவமான பேரின்பக் கடல் ; மென்மேலும் பெருகும் பெரியதான சங்குகளையுடைய கடல். (8) தண்டல் இல் - தடைபடுதல் இல்லாத. (9) கொடிச்சி வாய்க் குமுதம் விள்ள - குறமகளான வள்ளியம்மை திருவாயான குமுதமலர் திறந்து பேச ; கொடியில் உள்ள குமுதமலர் மலர ; (10) கரத் தாமரை முகிழ்த்திடுதலால் - கையாகிய கமலம் (கும்பிடுதற்குக்) குவிதலால் ; ஒளி யுடைய கமலம் குவிதலால். (11) உயிர்ப் பயிர் தழைப்ப - உயிர்களாகிய பயிர்கள் வாழ்வு பெற ; உயிர் உள்ள பயிர்கள் ஓங்கி வளர. (12) தண்ணளி - குளிர்ந்த அருள் ; பெரும் குளிர்ச்சி. (13) துண்டமதி - பிறைத்திங்கள். (14) பொதிந்த வேணி - நிறைந்த சடை யுடைய. (15) பரஞ்சோதி கண் பொறி - சிவனார் திருக்கண் அனல் பொறி உருவம் ; சிவனார் இடது திருக்கண். (16) தோன்றல் இவன் - பெருமையிற் சிறந்த இந்தப் பெருமான். (17) அண்டர் - வானோர். சந்திரா ! நீ முருகனுக்குச் சமம் என்று கூறும் பாடல் இது. (1)

63. [1]சொல்தரு [2]பெரும்புலவர் [3]கலையமுது [4]கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினாய் ;
[5]தோற்றிமுன் பொங்கி மலை போல அலை மோதும்,அச்
சோதி வேலையும் உகந்தாய் ;
[6]குற்றமில் குணத்தைக் குறித்த[8]இர வலர்[9]முகம்
கோடா(து) அளித்தல் செய்தாய்;
[10]கோகனக நாயகன் [11]வரக்கூ விடும்,குக்
குடம் கொடியதாகவைத்தாய் ;
உற்றிடும் [13]இதழ்க் குமுதம் [14]விண்டு தாள் தேன்ஒழுக,
[15]ஒளிநிலா நகை முகிழ்த்தாய் ;

உன்செய்கை, எம்பிரான் தன்செய்கை போலுமால் ;
உனையும் இவன் ஒவ்வாதிரான் ;
[16]அல்பொதி களத்தவன் அளித்த குமரேசனுடன்
அம்புலீ ஆட வாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே !

(1) சொல் தரு - நூற்களை உதவிய; புகழ் பெற்ற. (2) பெரும் புலவர் - தமிழ்ச் சங்கப் புலவர்கள் ; பெருமையுடைய வானோர். (3) கலை அமுது - நூற்களில் பெருகும் சுவை ; (பதினாறு) கலைகளில் உள்ள அமுதம். (4) கொள விருந்து ஓகைமேல் கொண்டருளல் - கொள்ள (அப்புலவர்கட்குத் தலைவனாக) இருந்து பேருவகை பெறல் - கொள்ளும்படி விருந்து அளித்து மகிழ்வு மேற்கொள்ளல். (5) தோற்றி முன் பொங்கி மலைபோல அலைமோதும் சோதி வேலை உகத்தல் - வெளிப்பட்டவுடன் சினந்து கிரவுஞ்ச கிரியைப் போலக் கடலையும் மோதி (வற்ற வைத்த) வேலாயுதத்தை உயர்த்தல் ; உதயம் செய்து எதிரில் மலை போல அலை யெறியும் வடவைக் கனலை உடைய கடலை விரும்பல். (6) குற்றமில் குணம் - பழுதற்ற அருட்குணம் ; குற்றமிலாத நிறம். (7) குறித்த - அழுந்த எண்ணிய ; மேற்கொண்ட. (8) இரவலர் - அடியவர் ; இரவில் மலரும் மலர்கள். (9) முகம் கோடாது - திருமுகம் மாறுபடாதபடி ; குவியாதபடி. (10) கோகனக நாயகன் - தாமரை நாயகனை சூரியன். (11) வரக் கூவிடும் - வரும்படிக் கூவும். (12) குக்குடம் - சேவலை. கொடியதாக - துவசத்தில் இருப்பதாக; கொடுமையானதாக. (13) இதழ் - அதரமாகிய ; இதழ்களை யுடையதான. (14) விண்டு - மலர்ந்து. (15) நிலா - புன் முறுவல் ; நிலவு. (16) அல்பொதி களத்தவன் - விடம் தங்கிய மிடற்றினனை சிவபிரான். இந்த இரண்டு செய்

யுளும், சந்திரனை முருகனுடன் சமப்படுத்திக் கூறிய **சாமோபாயம்.** (2)

**64.** கங்கைமுடி [1]அடிகட்(கு), ஓர் கண்ணுய் இருந்தி, அக்
கண்ணினுள் மணி இவன்காண் !
கலைகள்சில நிறைதி, பின் குறைதி, இவன் என்றும் [2]ஒள்
கலைமுழுதும் நிறைய நின்றுன் ;
எங்கும்,[3]இர வோன் எனத் திரிதி,இவன் அடியவர்
எவர்க்கும், [4]இரவினை ஒழிந்தான் ;
இருநிலத்(து) [5]அங்குரிக் கும்பயிர் வளர்த்தி, இவன்
எவ்வுயிரும் வாழச் செய்தான் ;
பொங்(கு) அமுதம், [6]அமுதா சனர்க்(கு) உதவினுய், இவன்
புத்தி முத்தியும் அளித்தான் ;
புவனம் படைத்த இவன், நின்னின் மிக்
கான் எனப் புகல்வது,ஓர் பொருளன்று காண் ;
அங்கண்மறை[7]ஓலிட்(டு) [8]அரற்றநின் றவனுடன்
அம்புலீ ஆட வாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே !

(1) அடிகட்கு - சிவபெருமானுக்கு. (2) ஒள் - ஒளி. (3) இரவோன் - இரவுப் பொழுதை ஆள்பவன் ; யாசகன் ; சிலேடைப் பொருள். (4) இரவினை - (அறியாமை) இருளை ; இரத்தலாகிய எளிமையை. (5) அங்குரிக்கும் — முளைக் கும். (6) அமுத அசனர்க்கு - அமுதத்தை உணவாகக் கொண்ட அமரர்க்கு. (7) ஓலிட்டு - அபயக்குரல் கொடுத்து. (8) அரற்ற - கதற. சந்திரா! முருகன் உனனிலும் உயர்ந் தோன் என உணர்த்தியபடி. (3)

65. [1]பாயிருள் போதத்(து) இருட்டன்றி, [2]அகஇருள்
படலம் கிழிப்ப(து) உணராய் ;
பனிவிசும்[3] பில்பொலிவ(து)[4] ஒன்றலால், [5]புவனப்
பரப்பெலாம் பொலிவ(து) [6]ஓராய் ;
[7]சேயிதழ்க் குமுதம் திறப்பதல் லால், [8]உளத்
திருமலர் திறக்க அறியாய் ;
சிறைவிரி[9] சகோரப்புள் அன்றி, எவ்வுயிரும்
திளைத்தின்பம் ஆரச்செயாய் !
[10]நீஇவற்(கு) ஒப்(பு)[11]அன்மை செப்புவ(து) என் ? [12]இப்பரிசில்
நின்பெரும் தவம், என்சொல்கேன் ;
[13]நெடியவன் முதல் தேவர் [14]குறுகிநிற் பவும்,உனை
நினைத்(து) அழைத் தருளினன் காண் ;
ஆயிர மறைக்கும் ஒரு பொருளா யிருப்பவனெ(டு)
அம்புலீ ஆட வாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே !

(1) பாய் இருள் போதத்து - பரவிய இரவுப் பொழுதில் (வரும்). (2) அக இருள் - ஆணவமான இதய இருள். (3) விசும்பில் - விண்ணில். (4) பொலிவது - பிரகாசிப்பது. (5) புவனப் பரப்பெலாம் - (இருநூற்று இருபத்து நான்கு) புவனம் முழுதும். (6) ஓராய் - உணர்ந்திலை. (7) சேயிதழ்- சிவந்த இதழ்களை யுடைய. (8) உளத் திருமலர் - இதய தாமரை. (9) சகோரப் புள் - நிலாமுகி ; இது, மதியின் கிரணங்களின்மூலம் சிந்தும் அமுதத் துளிகளைப் பருகி உயிர் வாழ்வதொரு பறவை. (10) இவற்கு - இந்தப் பெருமானுக்கு. (11) ஒப்பு அன்மை - ஒப்பு அல்லாத தன்மையை. (12) இப்பரிசில் - (நின்னையழைக்கும்) இப்பேறு. (13) நெடியவன் - திருமால். (14) குறுகி - (அண்மையில்) அணுகி. இவ்விரு செய்யுள்களும், சந்திரா ! நீ முருகனுக்குச் சமம் அல்ல என்று, வேறுபடுத்திக் கூறும் பேத உபாயம். (4)

66. [1]தருமன்னு பொன்னுலகும் மண்ணுலகும் ஒக்கத்
[2]தலைத்தலை மயங்கத் தொகும்
சந்நிதி யடைந்தவர்கள் [3]பையுள்நோய் முற்றும்
தவிர்ந்(து) அகம் மகிழ்ந்து, தவிராக்
[4]கருமன்னும் [5]ஊழிப் [6]பெரும்பிணியும் மாற்றிடுதல்
[7]கண்டனை யிருத்தியால் ; நின்
[8]கயரோக முடன்,[9]முயல் கறையும் துடைத்திடக்
கருதிடுதியேல், எம்பிரான்
திருமுன்னர் அள்ளியிடு [10]வெண்சாந்தும், மற்றைத்
[11]திருச்சாந்தும் நிற்க ; வற்றுச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்[12]குறும்
திவலை, ஒன்றே அமையுமால் ;
அரு என்ன உருஎன்ன அன்றென்ன நின்றவனெ(டு)
அம்புலீ ஆட வாவே ;
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே !

*(1) தரு (கற்பகத்) தரு. (2) தலைத்தலை மயங்கத் தொகும் - (விண்ணவர் நெருக்கத்தால் வானுலகு என்றும், மண்ணவர் மிகுதியால் நிலவுலகர் என்றும்) இடந்தோறும் மயங்கி எண்ணும்படிக் கூடும். (3) பையுள் - துன்பம். (4) கரு (தாயின்) கருவில். (5) ஊழி-யுகாந்த காலம் தொட்டு வரும். (6) பெரும்பிணியும் - பிறவி நோயும். (7) கண்டனை- முற்றெச்சம் ; கண்டு கொண்டே யிருக்கின்றாய் என்றபடி. (8) கயரோகம் — க்ஷய நோய். (9) முயல் கறையும் - முயல் களங்கமும். (10) வெண்சாந்தும் - வெண்ணீறும். (11) திருச்சாந்தும் - அங்க சந்தானப் பொய்கையில் உள்ள திருமண்ணும். (12) குறும் திவலை - சிறு துளி.' (5)*

67. ஒழியாத புவனத்(து) உயிர்க்குயிர தாய்நிற்ப(து)
ஒருதெய்வம் உண்டெனஎடுத்(து)
[1]உரையால் உணர்த்துவதை யொழிய, எவர் எவர்கட்கும்
ஊன்கண், [2]உளக்கண்ணதாம்
விழியாக முன்னின்று [3]தண்ணளி சுரந்(து,) அவர்கள்
வேண்டிய வரம் கொடுப்பான் ;
மெய்கண்ட தெய்வம் இத் தெய்வமல் லால்,புவியில்
வேறில்லை என்(று) உணர்தியால் ;
[4]பொழியாத புயல்தங்கு [5]புவனமும், [6]திசைமுகப்
புத்தேள் பெரும் புவனமும்,
பொன்னுலகும், மண்ணுலகும், எவ்வுலகு வேண்டினும்
பொருளன்(று) இவற்கு ; மற்றை
அழியாத வீடும் தரக்கடவன், இவனுடன்
அம்புலீ ஆட வாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே !

(1) உரையால் - நூல் பிரமாணத்தால். (2) உளக்கண்ணதாம் விழியாக - உள்ளத்தில் உள்ளதான உணர்வுக் கண்ணாக. (3) தண்ணளி - கருணை. (4) பொழியாத புயல்- திருமால் ; மேகவண்ணர் என்னும் பெயர் கொண்டு இங்ஙனம் கூறினர். (5) புவனமும்-வைகுந்தமும். (6) திசைமுகப் புத்தேள் பெரும்புவனமும் - நான்முகப் பிரமனுடைய பெரிய சத்திய லோகமும். இந்த இரு செய்யுளும் தான உபாயம். (6)

68. [1]நெட்டுடல் பைங்கண் கரும்பேய்கள், செம்மயிர்
நிரைத்தாணம் [3]வீக்கி [3]ஆர்த்து,
நிற்கும் குறள்பூதம் ஒன்றினை விடுத்(து,) உடலின்
[4]நெடியபழு என்பு நெரியக்
கட்டெனப், பிடியெனக், [5]கொடிறுடைத்(து) அடியெனக்,
கணநாதர் கடுக முடுகிக்,

கடல்வாய் திறந்தெனப், [6]பிலவாய் திறந்(து)அலறு
காட்சிநீ காணுயலை!
[7]மட்டுடைத்(து) ஊறும் தடம்கமலன் [8]முதலியோர்
வாய்புதைத்(து) அஞ்சி நிற்ப,
வருகென்(று) அழைத்திடவும், வாரா(து) இருத்தியால்;
மற்றிவன் முனிந்தால், உனக்(கு)
[9]அட்டதிக் கினிலும் ஒரு [10]திக்கிலை; எம் ஐயனுடன்
அம்புலீ ஆட வாவே!
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே!

(1) நெட்டு உடல் - பேருடல். (2) தூணம் - தூண். (3) வீக்கி - கட்டி. (4) நெடிய பழு என்பு - நீண்ட விலா எலும்புகள். (5) கொடிறு உடைத்து - கவுளை உடைத்து. (6) பிலவாய் - பிலத்துவாரம் போன்ற வாய். (7) மட்டு - தேன். (8) கமலன் - கமலத்தில் இருக்கும் பிரமன். (9) அட்ட திக்கினிலும் - எட்டுத் திசையிலும். (10) திக்கிலை - ஆதரவு இல்லை.
(7)

69. [1]குன்றைத் திறந்திட்ட [2]குடுமிவேல், சூருயிர்
குடித்திட விடுத்து நின்றான்;
[3]குண்டிகைக் கள்வனைக், குடுமித் [4]தலைப்பசுங்
குருதி பொங்கப் புடைத்தான்;
இன்றைக் குழந்தை யென்(று) எண்ணுது,[5]குலிசன் முதல்
[6]எண்மரும் பிறரும் ஒருஞான்(று)
எதிர்நின்(று) உடற்றி, அவர் பட்டபா(டு) அறியா(து)
இருந்தியலை; அதுகிடக்க,
முன்தக்கன் வேள்விக் களம், கொலைக் களமென்ன
முடியமரர் மொத்துண்ட நாள்,
முழுமதிக் கடவுள்நீ அவமதிப் புண்டதை
மொழிந்திடக் கடவதன்றுல்;

[7]அன்றைக் கணக்(கு) இன்றும் வந்திருக்கின்ற(து,) இனி
அம்புலீ ஆடவாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு முருகனுடன்
அம்புலீ ஆட வாவே !

(1) குன்றை - கிரவுஞ்சமலையை. (2) குடுமி - கூர் நுனியுடைய. (3) குண்டிகைக் கள்வனை - கமண்டலம் ஏந்திய நான் முகனை ; பிரணவ நுட்பம் உணராமல், உணர்ந்தான் போல் உரைத்ததனால் பிரமனை யிங்குக் கள்வன் என்றார். (4) தலை - தலையில். (5) குலிசன் - குலிசாயுதம் கொண்ட இந்திரன். (6) எண்மரும் - எண் திசை யதிபரும். (7) அன்றைக் கணக்கு - அன்று நடந்தது போன்ற செய்தி. (8)

70. தள்ளும் [1]பவக்கடல் [2]உழக்கும் எனை, முத்தித்
தடங்கரை விடுப்பவன் ; உனைத்
[3]தலையளிப் பான் வர அழைப்பவும், வராவிடில்,
[4]தண்ணளி சுரந்து, கருணை
வெள்ளம் கொழிக்கும் கடைக்கண் சிவப்ப, இவன்
வெகுளாது விடினும், அழுது
விழிசிவப்பக் காணில், [5]இரவிபகை[6]சாய்த்த[7]இள
வீரன் பொறுப்பான் அலன் ;
கள்ளம் பழுத்தகண் [8]கடைசியர் சிருர்,திரைக்
காவிரித் தண்துறை தொறும்
கதிர்நித்[9]திலம் குவி மணல் குன்றம் ஏறி, நின்
கலைமதிக் கலச அமுதை
அள்ளும் தடம்பணைச்[10] சோணுடன்[11] இவனுடன்,
அம்புலீ ஆட வாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே !

(1) பவக்கடல் - பிறவிக் கடலில். (2) உழக்கும் - உளைந்து வருந்தும். (3) தலையளிப்பான் - முதன்மை அருள்

பாலிப்பதன் பொருட்டு. (4) தண் அளி - குளிர்ந்த அருள். (5) இரவி பகை - (சூரியன் பகைவனும்) பானு கோபனை. (6) சாய்த்த - கொன்ற. (7) இளவீரன் - வீரவாகு தேவர். (8) கடைசியர் சிறுர்-பள்ளச் சிறுவர். (9) நித்திலம் குவி-முத்துக்களைக் குவித்த. (10) பணை - மருத நிலம் சூழ்ந்த. (11) சோனுடன் இவனுடன்-சோழநாட்டு இந்தக் குமரனுடன். (9)

71. தன்னெத்த தெய்வச் சிருரும், இள வீரரும்
தாள்நிழல் கீழ்நிற்ப, இச்
[1]சகதண்ட மண்டலம் [2]அடுக்கழியும் நாள், அமரர்
தமைஅழக் காண்பவன் இவன் ;
நின்னைப் பொருள்படுத்(து,) ஒருவிரல்[3]தலைச்சுட்டி
நீள்கழல் தாள் உதைந்து
நெடுமலர்க் கண்பிசைந்(து) அழுதழு(து) அழைத்தனன் ;
நினக்(கு) இதில் வியப்பில்லை காண் !
மின்னல் திரைச்சுர[4]நதித்தண்[5]துறைத் தேவர்[6]
பேதைக் குழாங்கள் என்னப்,
பெருகும் தடம்புனல் காவிரிப் பூவிரிப்
பெருந்தண் துறைச்சிறை விரித்(து)
அன்னக் குழாம் திளைத்(து) ஆடுசோ ணுடனுடன்
அம்புலீ ஆட வாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே !

(1) சகத் - உலகம் ; மண்டலங்களாகிய அண்டங்கள் எனக் கூட்டுக. (2) அடுக்கழியும் நாள் - அடுக்கு அடுக்காக அழியும் அந்நாளில். (3) தலைச்சுட்டி - நுனியால் குறிப்பிட்டு. (4) சுரநதி - தேவ கங்கை. (5) தண்துறை - குளிர்ந்த துறை. (6) தேவர் பேதைக் குழாங்கள் என்ன - தெய்வமாதர் கூட்டம்போல் ; அன்னங்கள் நீரில் மூழ்கி ஆடுகின்ற சோழநாடு என்றபடி; இவை நான்கு செய்யுள்களும் தண்ட உபாயம். (10)

## 8. சிற்றில் பருவம்

(அந்தகக்கவி-வீரராகவ முதலியார் இயற்றிய)

# சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

[சிறு-இல்; சிற்றில்: சிறுமியர் கட்டிய சிறுவீடுகளைச் சிதைக்கும் பருவம்; இது பதினேழாம் மாதத்தில் நிகழ்வது.]

---

72. கோவே! கொவ்வைச் செழும்பவளக்
கொழுந்தே! குறவர் [1]பசுங்கிளியும்,
[2]குலிசன் அளித்த [3]இளங்குயிலும்,
[4]குனிக்கும் மயிலும், தனித்(து) அகலாக்
[5]காவே! வேதப் பெருங்கடலே!
கடலிற் கடையாக் கவுத்துவமே!
கங்கைப் புனலால் வளர்ந்தெழுந்த
கரும்பின் சுவையே! [6]சுரும்(பு) இமிராப்
பூவே! பூவில் வரும்தேனே!
பொரும்[7]கோளரியே! அரிய பரம்
பொருளே! உலகுக்(கு) ஒரு பொருளாம்
[8]அவற்கும் விளங்காப் பொருள் விளக்கும்
தேவே! தேவக் குலமுதலே!
சிறியேம் [9]சிற்றில் [10]சிதையேலே!
சேயே! [11]சேயூர்ப் பெருமானே!
- சிறியேம் சிற்றில் சிதையேலே!

(1) பசும் கிளியும் - வள்ளி நாச்சியாரும். (2) குலிசன் - குலிசாயுதம் ஏந்திய இந்திரன். (3) இளம் குயிலும் - தேவயானையும். (4) குனிக்கும் - நிருத்தம் செய்யும். (5) காவே - கற்பகமே. (6) சுரும்பு இமிரா - வண்டுகள் மொய்க்காத.

(7) கோளரியே-சிங்கமே. (8) அவற்கும்-அந்தப் பிரமனுக்கும். (9) சிற்றில் - வாழ்க்கைச் சிறு வீட்டை. (10) சிதையேல் - சிதைந்து போம்படிச் செய வேண்டா. (11) சேயூர் - ஸ்தலப் பெயர். (1)

**73.** [1]கானே கமழும்[2]கடம்(பு) அவிழ்தார்க்
[3]கடவுட்(கு) அரசே![4]சுரலோகம்
காக்கும் துணையே! அவுணர் குலம்
[5]களையும் களிறே! இளைய சிறு
[6]மானேய் உலகுக்(கு) ஒரு[7]திருத்தாய்
மகவே![8]மகரா லயம் காயும்
[9]வடவா முகமே! அறுமுகமா
மதியம் உதித்த[10]வானகமே!
தானே உவமை தனக்கலது,
பிறிதொன்(று) இல்லாத்[11]தனிப்பொருளே!
தருமப் பொருளே! எழுத்தாறும்
தரித்தார்[12]இதய தாமரைச் செந்
தேனே! தெவிட்டாத் தெள்ளமுதே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேயே! சேயூர்ப் பெருமானே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

(1) கான் - மணம். (2) கடம்பு அவிழ் தார் - மணம் மலர்ந்த கடப்ப மலர் மாலை. (3) கடவுட்கு அரசே - தேவர் பெருமானே. (4) சுரலோகம் - தேவலோகம். (5) களையும் களிறே - களைந்து எறியும் யானையே. (6) மான் ஏய் - மான் போன்ற மருண்ட நோக்குடைய. (7) தாய் - உலகனைத்தும் ஈன்ற உமாதேவியின். (8) மகராலயம் காயும் - கடல் நீரை வற்றச் செய்யும். (9) வடவாமுகமே - வடவா முகாக்கினியே. (10) வானகமே - ஞானகாயமே. (11) தனிப்பொருளே -

*பிரம்ம சொருபமே. (12) இதய தாமரையில் ஊறும் தேனே என்க.* (2)

**74.** [1]மருவிற் பசுமைத்[2]துளவோனும்,
[3]வனசத் தவனும் காணுத
வடிவிற்[4]சோதி மடிப்புறத்தே
மலரும் திருத்தா மரை யலவோ ;
உருவிற்[5]புவனம் சதகோடி
[6]உதரத்(து) உமிழ்ந்த[7]பெருமாட்டி
[8]உரமும் தனமும் கரமும்[9]மறந்(து)
உறையாச் சிறுபங் கயம்அலவோ ;
[10]தருவிற் பெரியார் சிரம் அனைத்தும்
தரிக்கும் கமலக் குலம் அலவோ
சதுமா மறையின்[11]தலைப்பூத்த
[12]தண்டைப் புதுமுண் டகம்அலவோ ;
தெருவிற் [13]பொடியும் புகத் தருமோ ?
சிறியேம் சிற்றில் சிதையேலே !
சேயே ! சேயூர்ப் பெருமானே !
சிறியேம் சிற்றில் சிதையேலே !

*(1) மரு - மணம். (2) துளவோனும் - துளசி மாலை யணிந்த திருமாலும். (3) வனசத் தவனும் - தாமரை மலர்மேல் உள்ள நான்முகனும். (4) சோதி - சிவம். (5) சதகோடி புவனம் - அளவிலாத புவனங்களை. (6) உதரத்து உமிழ்ந்த - திருவயிற்றி லிருந்து பெற்ற. (7) பெருமாட்டி - பார்வதி. (8) உரமும் - திருமார்பும். (9) மறந்து உறையா - மறவாதிருக் கும். (10) தருவில் பெரியார் - ஐந்து தருக்களை யுடைய மேலோரான வானோர். (11) தலை - உச்சியில். (12) தண்டை - தண்டையணிந்த. (13) பொடியும் - புழுதியும். பங்கயம், கமலம், முண்டகம் முதலியன, தாமரையின் வேறு வேறு பெயர்கள் ; இவைகள் முருகன் திருவடிகளை உணர்த்தின.* (3)

75. [1]உதய ஆதவற்கும்,[2]இமகரற்கும்
ஒழியாப் [3]பதமும், [4]மழை வண்ணத்(து)
ஒருவன் புரந்த [5]மாளிகையும்,
உம்பர்க்(கு) அரசன் [6]பீடிகையும்,
[7]சுதை ஆதரிக்கும் [8]சுரர் வீடும்,
[9]உடுவின் இருப்பும், பெருமுனிவர்
சுருதி கிளைக்கும் [10]திருமனையும்,
[11]சோரா [12]உரகர் பேரகமும்,
[13]மதயானையின் எண்[14]திசைப்பாலர்
மணி ஆலயமும், விஞ்சையர்கள்
வயங்கும் கோயில் பலப்பலவும்,
[15]மக்கள் குடியும் புக்(கு,) அவுணர்
சிதையா(து) உதித்த பிரான் அன்றே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேயே! சேயூர்ப் பெருமானே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

(1) உதய ஆதவற்கும் - உதய சூரியனுக்கும்; ஆதபன் - நன்றாகக் காய்பவன் எனும் பொருட்டு. (2) இமகரற்கும் - பனிபடர்ந்த குளிர்ந்த சந்திரனுக்கும். (3) பதமும் - பதவியையும். (4) மழை வண்ணத்து ஒருவன் - முகில் வண்ணரான திருமால். (5) மாளிகையும் - வைகுந்தமும். (6) பீடிகையும் - சிங்காதனமும். (7) சுதை ஆதரிக்கும் - அமுது விரும்பும்; அமிர்தத்தால் காக்கப் பெறும் எனினுமாம். (8) சுரர்வீடும் – தேவ லோகமும். (9) உடுவின் இருப்பும் – நட்சத்திர மண்டலமும். (10) மனையும் - ஆஸ்ரமங்களும். (11) சோரா - சோர்வடையாத ' (12) உரகர் பேரகமும் - நாக லோகம் எனும் பாதலமும். (13) மதயானையின் - திசையானைகள் (தங்கும்). (14) திசைப்பாலர் - திக்குப் பாலகர்

(15) மக்கள் குடியும் - பெருமக்கள் இருப்பிலும். அவுணரைச் சிதைத்து, பதமும், மாளிகையும், பீடிகையும், வீடும், இருப்பும், மனையும், அகமும், ஆலயமும், கோயிலும், குடியும் துதித்த பிரான் நீ யல்லவா என்றபடி. அல்லது, அவைகளை அவுணர்கள் சிதைக்காதபடி அவதரித்த பிரான் அல்லவா எனினுமாம். (4)

76. [1]உருமே கடுக்கும் [2]திருஅரைநாண்
உடுக்கும் மணிக்கிங் கிணி,நாவிட்(டு)
ஒரு சற்(று) ஒலித்தால், பகிரண்ட
கூடம் திடுக்கிட்(டு) உடையாதோ;
[3]மருவே திகழும் செங்கமல
மலர்ச்சீ ரடியின் சிறுசதங்கை,
வாய் விட்(டு) அரற்றில், கடல் ஏழும்
வாய்விட்(டு) அரற்றி [4]மறுகாதோ;
[5]குருமே தகைய கடகமும்,[6]கைத்
தொடியும் [7]கறங்கில், புவனம் எலாம்
[8]கோலி வளைக்கும் பலகோடிக்
[9]குவடும் [10]பிதிர்பட்(டு) உதிராதோ;
திருமேனி குழைந்திட, நடந்து
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேயே! சேயூர்ப் பெருமானே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

(1) உருமே கடுக்கும்-இடிபோன்று ஒலிக்கும். (2) அரைஞாணுக உடுக்கும் மணிகள் பதித்த கிங்கிணி என்க: கிண்கிண் என ஒலித்தலின் அது, கிண்கிணி எனும் பெயர் பெறும். (3) மரு - மணம். (4) மறுகாதோ - கலங்காதோ. (5) குரு மேதகைய-மேலான ஒளியுடைய; குரு - ஒளி: நிறமுமாம். (6) கைத்தொடி-கைவளை யணி. (7) கறங்கில்-சுழன்று ஒலித்தால். (8) கோலி - சூழ்ந்து. (9) குவடும் - மலைகளும்;

மலைச் சிகரங்களுமாம். (10) பிதிர்பட்டு - பொடிபட்டு; பல துண்டங்களாகி எனினுமாம். நீ நடந்தால், கிங்கிணி, சதங்கை, கடகமும், தொடியும் ஒலிக்குமே; அதனால் வீளையும் விபரீதங்கள் இவை என விண்ணப்பித்தபடி. (5)

77. சுற்றின் முழங்கும் கடல் ஏழும்
உலையாய்ச், சுடுதீ வட அனலாய்த்,
[1]தொல்லைத் [2]திகிரிக் கிரி அடுப்பாய்ச்,
சுடர்மா மேரு [3]கடமே ஆய்,
[4]முற்றில் பிடித்துக் கொழித்(து) எடுக்கும்
[5]வல்சி, [6]முகட்டில் உடுக்குலமாய்,
முதிரும் [7]கதிரே திருவிளக்காய்,
[8]முகில் ஊர்தியினன் மூதூரும்,
பற்றில் வகுத்த பேரளகைப்
பதியும், [9]பசும்பொன் அறையே ஆய்ப்,
[10]பணிப்பா தலம் செம் மணிப்பேழைப்[11]
படியாய், அடையும் [12]பகிரண்டம்
[13]சிற்றில் இழைப்பாள் தன்மகனே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேயே! சேயூர்ப் பெருமானே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

(1) தொல்லை - மிகப்பழைய. (2) திகிரிக் கிரி - (எழுகடலுக்கும் அப்பால் இருக்கும்) சக்கரவாள மலை. (3) கடம் - (சோறு சமைக்கும்) பாத்திரம். (4) முற்றில் - முறம். (5) வல்சி - அரிசி. (6) முகட்டில் உடுக் குலமாய் - விண்ணில் உள்ள நட்சத்திரங்களாய். (7) கதிரே - சந்திர சூரியர்களே. (8) முகில் ஊர்தியினன் மூதூரும் - மேகத்தில் ஊர்ந்து வரும் இந்திரன் பொன்னுலகும். (9) பொன் அறையேயாய் -

பொக்கிஷ சாலையாய். (10) பணிப் பாதலம் - நாக லோகம். (11) பேழைப் படியாய் அடையும்-பெட்டிபோலவே அமைந்த. (12) பகிரண்டம்-பேரண்டத்தை. (13) சிற்றில் இழைப்பாள் தன் - சிறு வீடாகக் கட்டி விளையாடும் சிவையினுடைய. (6)

**78.** [1]நகைத்தண் [2]தரளத் திரள்அரிசி
நறுந்தேன் [3]உலையும் கவிழாதோ ;
[4]நந்தின் கடமும் உடையாதோ ;
[5]நளிமா [6]துளைத் தீ அவியாதோ ;
தொகைத்தண் [7]பவள விளக்கணைந்து
விடாதோ ; அடியேம் வதுவையெனச்
சொல்லிச் சொல்லிக் கொணர்ந்த [8]சிறுர்
விருந்தும் வருந்திச் சோருதோ ;
[9]முகைப்புண் டரிகம் [10]உரம்பிணித்து,
முலையென்(று) அறிந்(து,)உன் இடத்திரங்கி,
மொழிந்து, துயிற்றும் [11]மணல்குழந்தை,
முழுத்தா மரைக்கண் விழித்து, மனம்
திகைப்புண்(டு) அழுது தேம்பாதோ ;
சிறியேம் சிற்றில் சிதையேலே ;
சேயே ! சேயூர்ப் பெருமானே !
சிறியேம் சிற்றில் சிதையேலே !

(1) நகை - ஒளி யுடைய. (2) தண் தரளத் திரள் - குளிர்ந்த முத்துகள். (3) உலை - உலை நீர். (4) நந்தின் கடமும் - சங்காகிய சோற்றுப் பானையும். (5) நளி - குளிர்ந்த. (6) மாதுளைத் தீ-மாதுளம் பழமாகிய நெருப்பு. (7) பவழமாகிய விளக்கு. (8) சிறுர்-சிறுவர். (9) முகைப் புண்டரிகம்-தாமரை அரும்பை. (10) உரம் - மார்பு. (11) மணல் குழந்தை - மண்

பொம்மையான குழவி. முத்து, அரிசி; தேன், உலை நீர்; மண் பொம்மை, தன் குழந்தை யெனல் முழுதும், பாவனை; சிறுமியர் விளையாட்டு இது. (7)

79. [1]வெய்யோன் [2]பகலை இரவாக்கும்
[3]விரகில் பெரிய நின்மாமன்,
மேனாள் [4]பொதுவர் அகம்புகுந்து,
வெண்பால் உறியின் நடுக்குழிப்பக்,
[5]கை ஓர் இரண்டும் பிணித்திலரோ;
[6]குடவர் மடவார், சகம் காக்கும்
கடவுள் எனத் தாம் பயந்தனரோ;
கட்டா(து) அகல விட்டனரோ;
ஐயோ! [7]புலந்து தமியேமும்,
அன்னை மார்க்கும் செவிலியர்க்கும்
அழுது மொழிந்நால் சீருரோ;
அனைத்தும் ஒருவன் ஆகி நிற்கும்
[8]செய்யோன் மகன் என்(று) அஞ்சுவரோ?
சிறியேம் சிற்றில் சிதையேலே;
சேயே! சேயூர்ப் பெருமானே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

(1) வெய்யோன் - சூரியனுடைய. (2) பார்த்தனைக் காக்க, கண்ணன் பகலை இரவாக்கிய கதையைப் பாரதம் கூறும். (3) விரகில் - கபடத்தில். (4) பொதுவர் - இடையர். (5) கை ஓர் இரண்டும் - ஒப்பற்ற இரு திருக்கரத்தையும். (6) குடவர் மடவார் - இடைக்குல மாதர். (7) புலந்து - மெலிந்து. (8) செய்யோன் - சிவபிரான். (8)

80. உவந்து தமியேன் முகக்கமலத்(து)
ஒளிவா டுகைக்கும், நின்திருந்தாள்
[1]ஓரா யிரக்கால் பணிந்து பணிந்(து)
ஒழியா(து) இரக்கும் மொழியினுக்கும்,
[2]கவந்தம் நடிக்கும் அவுணர் செருக்
களத்தே [3]செருக்கும் உனதுதகர்[4]
கடவுள் இனத்தின் கொடுமருப்பால்[5]
கலங்கு நிலைக்கும், [6]கழுநீராய்
[7]நிவந்த கருங்கண் சொரிந்(து) எமது
நிறமும் கறுத்த கண்ணீர்க்கும்,
[8]நிலாநித் திலமும் வயிரமுமே
கொழித்துக் கொழித்து [9]நிலத்திழைத்துச்
சிவந்த விரற்கும், இரங்காயோ ?
சிறியேம் சிற்றில் சிதையேலே !
சேயே ! சேயூர்ப் பெருமானே !
சிறியேம் சிற்றில் சிதையேலே !

*(1) ஓர் ஆயிரக்கால் - ஓராயிரம் தரம். (2) கவந்தம் - தலையற்ற உடல். (3) செருக்கும் - இறுமாக்கும். (4) தகர் - (வாகனமான) ஆடு. (5) மருப்பு - கொம்புகள். (6) கழுநீர் - நீலோற்பலம். (7) நிவந்த - விளங்குகின்ற. (8) நிலா நித்தில மும் - பிரகாசிக்கிற முத்துகளையும். (9) நிலத்து இழைத்து - பூமியில் (சிறுவீடு கட்ட அவைகளை) இணைத்து.* (9)

81. [1]எழுத்தாய் நிகரும் இருகரங்கள்
வருந்தி வருந்தி, யமன்முதலோர்
இயற்றும் பெருஞ்சூர் [2]மாளிகையோ ;
[3]இருங்கோள் அரிமா [4]முகன்அகமோ ;

முழுத்தா ரகன்தன் [5]சீர்அகமோ;
[6]முதிரும் கதிர்ஆ யிரத்தினையும்
[7]முனிந்தோன் முரசும், பேரிகையும்
முழங்கி எழும்பொன் கோயில்லோ;
மழுத்தா மரைக்கை [8]மணிமிடற்றன்
[9]மகரச் செவியுள் பகரும், ஒரு
வழுவாப் பொருளை அறியாது,
மயங்கித் தியங்கிச் [10]சிறையுறைந்தான்
செழுத்தா மரைப்பூஞ் [11]சிற்றில்லோ;
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேயே! சேயூர்ப் பெருமானே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

(1) எழுத்தாய் நிகரும் - (சாமுத்திரிக) இலக்கணப்படி ஒத்த. (2) சூர் - சூரபன்மன். (3) இரும் கோள் - பெருமிதம் கொண்ட; கொள் என்பது முதல் நீண்டு கோள் என்றாயது. (4) அரிமா முகன் - சிங்கமுகன். (5) சீர் அகமோ - சிறந்த மாளிகையோ. (6) முதிரும் கதிர் ஆயிரத்தினையும் - ஆயிரம் கிரணமுள்ள சூரியனையும். (7) முனிந்தோன் - முனிந்த பானு கோபன். (8) மணி மிடற்றன் - நீலகண்ட நின்மலன். (9) மகரம் - மகரகுழை யணிந்த. (10) சிறை உறைந்தான் - சிறை வாசமான பிரமன். (11) சிற்றில்லோ - சிறுவீடோ. (10)

# 9. சிறுபறைப் பருவம்

(சிதம்பர ஸ்வாமிகள் அருளிய)

# திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ்

[சிறிய பறையடித்து ஒலியெழுப்பும் பருவம்; இது பத்தொன்பதாம் மாதத்தில் நிகழ்வது.]

---

82. [1]கனககுவ(டு) எனநிலவு வீரவா குத்தலைவர்,
[2]ககனமுக(டு) அளவும் இரதக்
[3]கணமணி முழக்கும்; [4]கவுள்குழி திறந்துபாய்
[5]கலுழிமத கரிமுழக்கும்;
[6]மனகதியி னைப்பொருவு குரகத முழக்கொடு,
[7]வயபூத கணமுழக்கும்;
[8]வால்வளை முழக்கும்; அதி பேரிகை முழக்கும்; அகல்
வானவர்கள் [9]முடிமுழக்கும்;
[10]பனகஅணை துயிலும்[11]அவன் முதலினோர்,[12]உபயதிசை
பல்லாண்டு சொலும் முழக்கும்;
[13]படி(று)[14]அவுண மாசுணக்(கு) [15]உரும்எனச் செவிபுகப்
பண்டுசூர் வென்ற [16]சதுரா!
தினகரனை நிகர்சமர புரியிலுறை குமரவேள்!
சிறுபறை முழக்கி யருளே!
[17]செறிகலப மயில்முதுகில் உதயசின்[18]மயதூய!
சிறுபறை முழக்கி யருளே!

(1) *கனக குவடு என நிலவு* - மேருமலை போல் விளங்கும். (2) *ககன முகடு அளவும்* - அண்ட முகட்டை அளாவிய. (3) *கணமணி* - கூட்டமான மணிகளின். (4) *கவுள் குழி* - கன்னத்தின் குழி. (5) *கலுழிமத கரி* - காட்டாறு

போலப் பாயும் மத நீருடைய யானைகளின். (6) மனகதி யினைப் பொருவு குரகதம் - மனோ வேகம் போல் செல்லும் குதிரைகளின். (7) வயம் - வெற்றியுடைய. (8) வால் வளை - வெண்ணிற சங்குகளின். (9) முடி முழக்கும் - மகுடங்கள் (ஒன்றோ டொன்று உராய்வதால் உண்டாகின்ற) ஒலியும். (10) பனக அணை-ஆதிசேடனாகிய படுக்கைமேல். (11) அவன்-அத் திருமால். (12) உபய திசை - இருபுறமும். (13) படிறு-வஞ்சகம் உள்ள. (14) அவுண மாசுணக்கு - அசுரர்களாகிய பாம்புகட்கு. (15) உரும் எனச் செவி புக - இடி யெனும்படி (அவர்) செவிகளில் ஏற. (16) சதுரா - மேம்பாடு உடைய வனே. (17) செறி கலப - அடர்ந்த தோகை யுடைய. (18) சின்மய தூய - ஞான சொருப அமலா. (1)

**83.** [1]குடமுழா [2]வாணன், ஈராயிர கரம் கொண்டு
குமுகுமு எனவே முழக்கக் ;
[3]கொண்டலின் நிறக்கடவுள் முழவொலி முழக்க ; விரி
[4]கோகன மாளிகையினன்
[5]தடமருவு கைத்தாளம் நல்தொனி முழக்க ; அம்
[6]தமருகத் தொனி முழக்கத் ;
[7]தார்அளி முழக்க ; [8]மறை நூபுரம் முழக்க ; [9]விரு(து)
ஆள்கள் தாளம் முழக்க ;
[10]அடல் நதி இரைக்க ; மணி [11]அரவுகள் இரைக்க ; [12]உழை
அலற ; முயலகன் நெளிவுற ;
ஆடக மணிச்சபையின் நாடகம் இழைத்(து,) உமைக்(கு)
அன்புசெயும் இன்ப வடிவோன்
திடமருவு குமரனே ! சமரபுரி முருகனே !
சிறுபறை முழக்கி யருளே !
செறிகலப மயில் முதுகின் உதயசின் மயதூய
சிறுபறை-முழக்கி யருளே !

(1) குடமுழா - குடம் போன்ற வடிவுடைய ஒரு பறை. (2) வாணன் - வாணாசுரன். (3) கொண்டலின் நிறக் கடவுள் - மேக வண்ணரான திருமால். (4) கோகனக மாளிகையினன் - தாமரை (மலராகிய) மாளிகை(யில் தங்கிய) நான்முகன். (5) தடம் மருவு - விசாலமாகப் பொருந்திய. (6) தமருகம் - உடுக்கை. (7) தார் அளி - (கொன்றை) மாலையில் மொய்த்த வண்டுகள். (8) மறை நூபுரம் - (திருவடியிலுள்ள) வேதச் சிலம்புகள். (9) விருது ஆள்கள் - விருது பாடுவோர். (10) அடல் நதி இரைக்க - வலி மிகு கங்கை ஒலிக்க. (11) அரவுகள் - (அணிகளான) பாம்புகள். (12) உழை - (திருக்கரத்தில் உள்ள) மான். (2)

84. ஆறு சமயக் கடவுள், வேறுவே(று) இன்றி, யான்
ஒருவனே அங்கங்(கு) இருந்(து,)
அன்பர்க்கு முத்திதரு வித்(து) என்று, யாவர்க்கும்
அறிவித்த வதன மணியே !
[1]வீ(று) அசுரர் [2]துஞ்ச, வெம் சிறைவிண்டு[3] வானவர்கள்
விண்ணகத்(து) அமுதருந்த,
வெற்றி முர(சு) அன்றுனது [4]சேனை வாரிதியிடை,
வியப்புற முழங்கு முறைபோல்,
மாறுபடு காமாதி [5]வெம்படைகள் துஞ்சிட,
[6]மலச்சிறை கழன்று, [7]ஞான
மாவிண் ணகத்(து) இருந்(து,) ஆநந்த அமு(து) எனது
வாய்மடுத்(து) உண்ண, [8]அறிவில்
தேறுமறை நாதமென நினது [9]முளரிக்கரச்
சிறுபறை முழக்கி யருளே !
செறிகலப மயில் முதுகின் உதயசின் மய தூய
சிறுபறை முழக்கி யருளே !

(1) வீறு - (தமக்கு ஒப்பில்லை என்று) இறுமாந்த. (2) துஞ்ச - இறுதி நித்திரை பெற. (3) விண்டு - நீங்கி.

(4) சேனை வாரிதி யிடை - சேனைகளாகிய கடலின் நடுவில். (5) வெம் படைகள் - (காம, குரோத, லோப, மோக, மத, மாற்சர்யமாம்) கொடிய ஆறு வகைப் படைகளும். (6) மலச் சிறை - ஆணவச் சிறை. (7) ஞான மா விண்ணகத்து - ஞான ஆகாயத்தில். (8) அறிவில் தேறும்-சிவஞான உணர்வால் தெளிந்து உணரும். (9) முளரிக்கரம் - தாமரை போன்ற திருக்கரத்தில் (உள்ள). (3)

85. [1]கட்டைமுள் தழுவுதாள் [2]நெட்டிதழ் உடுத்த, செங்
கமல நான்முக[3]எகினமும் ;
கவுத்துவ மணிப்[4]பணியொ(டு) [5]அம்போரு காடவி
கவித்த [6]பச்சைப் பன்றியும் ;
[7]மட்டுலவு சீர்பாதம் இன்றளவு கண்டிலா
[8]வானவனும் ; [9]ஓர் ஒருவரை
[10]வழிவரும் [11]சரியாதி வருவித்து, வீடுதரும்
வனை தமிழ்க்[12]காழி மேவி ;
[13]எள்துணையும் அறிவரும் அநந்த சீவரை, [14] வதுவை
யென்று பெயர் இட்டழைத்(து,)அங்(கு)
[15]இரும்புண்ட நீரில் திரும்பாத வீடுதரும்
இனிய[16]கவுணியர் விளக்கே !
[17]திட்டமொடு வரம்உதவு சமரபுரி முருகவேள் !
சிறுபறை முழக்கி யருளே !
செறிகலப மயில்முதுகின் உதயசின் மயதூய
சிறுபறை முழக்கி யருளே !

(1) கட்டை முள் தழுவுதாள் - குறுகிய முள்கள் தழுவிய தண்டை (அணிந்த). (2) நெட்டு இதழ் - நெடிய புற இதழ்கள் (மொய்த்த). (3) எகினமும் - அன்னமும். (4) பணியொடு - ஆபரணத்துடன். (5) அம்போருக அடவி கவித்த - தாமரையாகிய காடு சூழ்ந்த. (6) பச்சைப் பன்றி

யும் - பசுமை நிற வராகமும். (7) மட்டுலவு — மணம் வீசும். (8) வானவனும் - சிவபிரானும். (9) ஓர் ஒருவரை - ஒவ்வொருவரையும். (10) வழிவரும்-படிமுறையாக வருகின்ற. (11) சரிபாதி வருவித்து - சரியை முதலிய வழியில் செலுத்தி. (12) காழி — சீகாழி. (13) எள் துணையும் அறிவரும் - எள் அளவு கூட அளவிட்டு அறிய இயலாத. (14) வதுவை - (எமக்குத்) திருமணம். (15) இரும்புண்ட நீரில் - (பழுக்கக் காய்ச்சிய) இரும்பு பருகிய நீரைப்போல். (16) கவுணியர் விளக்கே — (ஆதிசைவ) கவுணியர் (கோத்திரத்தில் ஞான சம்பந்த) தீபமாக விளங்கியவரே. (17) திட்டமொடு - (தனை யடைந்தார் பிறரை வேண்டாதபடி) திட்டமிட்டு. (4)

**86.** [1]வெளியில் [2]வளி அசைவற்று [3]நின்றவா(று,) [4]அமல உளம்
[5]மிளிர்பரத்(து) இலய மாகி,
மெய்த்தவம் இழைப்பவர்க்(கு,) [6]அகல்வான நதிநீர்
வியன்தொளைக் [7]கரம் நிமிர்த்(து,)[8]அங்(கு)
அளியொடும் கரிமொண்டு [9]குண்டிகை நிறைப்ப ;[10]அல
வன்பகைக் கவிகள் தாவி,
அம்கற் பகக்கனி கொணர்ந்து வந்திக்க ;அனு
தினமும் அவர் [11]அறையும் மறைநூல்
கிளிகள் பயிலக் ; [12]ககன கந்தருவர் வந்(து,) அமுத
கீத நாதம் முழக்கும்,
கிளர் சந்தனப் பொங்கர்[13]மலிசாரல்[14]கயிலை,அம்
கிரிவார [15]வளம் நிகர்க்கும் ;
தெளிவுதரு [16]சமரபுரி தனில் நிலவு குமரவேள்
சிறுபறை முழக்கி யருளே !
செறிகலப மயில் முதுகின் உதயசின் மய தூய
சிறுபறை முழக்கி யருளே !

(1) வெளியில் - விண்ணில். (2) வளி - காற்று. (3) நின்ற ஆறு - நின்றது போல. (4) அமல உளம்-மாசற்ற

மணம். (5) மிளிர் பரத்து - பிரகாசிக்கிற சொரூப சிவத்தில். (6) அகல் வரன நதிநீர் - அகன்ற கங்கை நீரை. (7) கரி வியன் தொளை கரம் நிமிர்த்து - யானைகள் பெரிய துவாரம் பொருந்திய துதிக்கையை மேலே தூக்கி. (8) அங்கு அளியொடு மொண்டு - அங்கு அன்பொடு மொண்டு. (9) குண்டிகை நிறைப்ப - கமண்டலத்தில் (நீரை) நிரப்பவும். (10) அலவன் பகைக் கவிகள் தாவி - நண்டுகட்குப் பகையான குரங்குகள் (மேலே) தாவி. (11) அறையும் மறைநூல் - ஓதும் வேத மொழிகளை. (12) ககனம் - விண்ணில் உள்ள. (13) பொங்கர் மலி - சோலை நிறைந்து. (14) சாரல் - பிரணவ மலைச் சாரலானது. (15) வார வளம் நிகர்க்கும் - சாரல் வளம் போல் தோன்றும். (16) சமரபுரி - திருப்போரூர். (5)

வேறு

87. [1]புகர்படு தொண்டை நிமிர்த்துச் [2]சிகிவாய்
பொருவக்[3] கரி,மதியில்
பொங்(கு) அமு(து) அள்ளிப், [4]பிடிகளி பெருகப்
[5]போழ்வாய் வழி ஊற்றி,
[6]மகவுடு தடவும் [7]பொழில்படு [8]முகில்வாய்
[9]மணிநீர் [10]திணி தரளம்
வாரி இறைத்துக், கற்பக [11]நல்குழை,
மலர்நறை[12] சொரி தரவே,
தகர முறித்துக் ; [13]கயமுனி பகுவாய்
தந்(து) அப் பிடி நுதலைத்[14]
தைவந்(து,) அருகில் அணைத்து [15]மணந்திடு
சண்பக மலர் துயிலும்[16]
குகைபடு [17]சாரல் போரூர் இறையே !
கொட்டுக சிறு பறையே !
[18]கொத்துறு முத்தமிழ் மெத்த வளர்த்தவ !
கொட்டுக சிறு பறையே !

(1) புகர்படு தொண்டை - புள்ளி வாய்ந்த பெண்யானை யின் வாயை. (2) சிகிவாய் பொருவ - மயில் வாய் திறந்தாற் போல. கரி நிமிர்த்து - ஆண்யானை நிமிர்த்து. (3) மதியில் பொங்கு அமுது அள்ளி - சந்திரனிடம் மிக்கிருக்கும் அமுதை(த்தன் துதிக்கையால்) அள்ளி. (4) பிடி களி பெருக - பெண் யானை களிப்பு மிக. (5) போழ் -(அதன்) பிளந்த. (6) மக உடு தடவும் - மக நட்சத்திரத்தை அளாவிய. (7) பொழில் படு-சோலைகளில் படிந்த. (8) முகில்வாய் - மேகங்களிடத்தில் இருக்கும். (9) மணி நீர் - அழகிய நீரும். (10) திணி தரளம்-திட்பமான முத்துக்களும். (11) நல் குழை- சிறந்த தளிர்களும். (12) நறை சொரிதரவே தகர முறித்து - தேன் சிந்தத் தகர்ந்து போம்படி முறித்து. (13) கபமுனி பகுவாய் - யானைக் கன்றின் பிளந்த வாயில். (14) அப் பிடி நுதலைத் தைவந்து - அப் பெண் யானையின் நெற்றியைத்தடவி. (15) மணந்திடு - மோந்து கலக்கும் மலைச்சாரல் என்றபடி. (16) துயிலும் - நிலவும். (17) சாரல் - (பிரணவ மலைச்) சாரல். (18) கொத்துறு-(இயல் இசை நாடகம் எனத்) திரண்ட. (6)

88. [1]அளைகடை [2]முடை கது வியதளிர் வடிவத்(து,)
ஆய்ச்சியர் மத்(து) ஒலியும்;
[3]அம்குட மடிமுலை விம்மிக் [4]கன்றுளி
[5]ஆநிரை கத்(து) ஒலியும்;
[6]கிளைபடு தொளைவழி விரல்விடு [7]தொறுவர்கள்
கீதக் குழல் ஒலியும்;
[8]கேழ்செறி [9]கானக் கோழிகள், முறைமுறை
கிட்டிக் கூ வொலியும்;
விளைதரு [10]தளவத்(து) [11]அளிபல, [12]விளரி
விளக்கிய சீரொலியும்;

விடியல் காலைக் [13]கடலைப் பொருவ
மிகுத்தெழு மா முல்லைக்[14]
[15]குளமலி கண்ணன் தருபோரூர்இறை
கொட்டுக சிறுபறையே!
கொத்துறு முத்தமிழ் மெத்த வளர்த்தவ!
கொட்டுக சிறு பறையே!

*(1) அளை கடை - தயிர்கடையும். (2) முடை கதுவிய - முடை நாற்றம் கமழும். (3) அம் குட மடி - அழகிய குடம் போன்ற மடியில் உள்ள. (4) கன்று உளி - கன்றை நினைத்து. (5) ஆநிரை - பசுக்கள். (6) கிளை - இசை. (7) தொறுவர்கள். இடையர்கள். (8) கேழ் செறி-நிறம் மிக்க. (9) கானக் கோழி கள் - காட்டுக் கோழிகள். (10) தளவந்து - முல்லைகளில். (11) அளிபல - பல வண்டுகள். (12) விளரி - இது ஒருவகைப் பண். (13) கடலை பொருவ - கடலைப் போல. (14) முல்லை - முல்லை நிலம் சூழ்ந்த. (15) குளம் மலி கண்ணன் - நெற்றி யில் நிறைகண் உடைய சிவனுர்.* (7)

89. கிளிமொழி பகர்வார் ; கீதம் பயில்வார் ;
கின்னரி வாசிப்பார் ;
[1]கேழ்கலன் அணிவார் ; மாலைகள் புனைவார் ;
கிளர்மயில் நடம் இடுவார் ;
[2]அளிசுழல் [3]பூப்பந்(து) எறிவார் ; [4]குங்குமம்
அள்ளி இறைத்திடுவார் ;
ஆடவர் புயஅணை மீதில் துயில்வார் ;
[5]அழகு பணிக்கருள்வார் ;
[6]களிறிடை வருவார் ; சிவிகையில் வருவார் ;
[7]கவனப் பரிவருவார் ;

[8]காமனில் வருவார் ; [9]மாமனில் வருவார் ;
[10]கஞ்சனில் வந்தருள்வார் ;
குளிர்தமிழ் புனைவார் நிகழ்போ ரூர்இறை
கொட்டுக சிறுபறையே !
கொத்துறு முத்தமிழ் மெத்த வளர்த்தவ !
கொட்டுக சிறுபறையே !

(1) கேழ்கலன் - ஒளியுடைய ஆபரணங்கள். (2) அளி சுழல் - வண்டுகள் (மதுவுண்டு) சுழலும். (3) பூப்பந்து - மலரால் தொடுத்த பந்தை. (4) குங்குமம்-குங்குமக் குழம்பை. (5) அழகு பணிக்கு அருள்வார். (தம்) அழகை(த்தாம் அணிந்த) ஆபரணங்கட்குத் தருவார். (6) களிறிடை - யானை மேல். (7) கவனப் பரி-வேகம் மிக்க குதிரை மேல். (8) காமன் இல் - மன்மதன் தேவியான இரதிபோல். (9) மாமன் இல் - திருமால் தேவியான திருமகள் போல். (10) கஞ்சன் இல் - கமலாசன நான்முகன் தேவியான கலைமகள் போல் ; மற்று, முற்பகுதியில் சொன்ன மகளிரும், மன்மதன் போலும், திருமால் போலும், பிரமன் போலும் உள்ள ஆடவரும் எனலுமாம். (8)

90. [1]உதடு கடந்த [2]நெடும்பலும், [3]உள்குழி
கணும், [4]எக் கியவயிறும்,
[5]ஊர்அர வங்கள் நெளிந்திடு செவிகளும்,
உளநெட் டைப்பல பேய்,
[6]கதழ்எரி வெம்பசி அற்றனம் என்று,
களிப்பொடு கை கொட்டக் ;
[7]ககனர்க்(கு) [8]அர(சு,) இகல் [9]அற்றனம் என்(று,) அணி
[10]கடகத் தோள் கொட்ட ;

[11]மதமலி அவுணர் உளம் பறை கொட்டிட,
வானவர்[12]நகரி எலாம்
மன்னிய வீரப் [13]பேரிகை கொட்ட,
மணிக்குடர் உதிரம் நிணம்
குதிகொளும் வெற்றிச் [14]சத்தி தரித்தோய் !
கொட்டுக சிறு பறையே !
கொத்துறு முத்தமிழ் மெத்த வளர்த்தவ !
கொட்டுக சிறுபறையே !

(1) உதடு - உதட்டை. (2) நெடும் பலும்-நீண்ட பற்களும். (3) உள்குழி கணும் - உள்ளே குழிந்த கண்ணும். (4) எக்கிய - மேல் ஏற்றிய. (5) ஊர் - ஊர்ந்து செல்லும். (6) கதழ் எரி-பற்றி எரிக்கும். (7) ககனர்க்கு - விண்ணுலகர்க்கு. (8) அரசு - அரசனை இந்திரன். (9) இகல் அற்றனம் - பகையற்றோம். (10) கடகத்தோள் - கடகம் அணிந்த தோள். (11) மதமலி - வன்மை மிக்க ; அச்சத்தால் அவுணர் உளம் அஞ்சியதாகலின், உளம்பறை கொட்ட என்றார். (12) நகரி - நகரம், (13) பேரிகை - முரசு. (14) சத்தி - வேல் படை. (9)

91. [1]மரகத மணிக்குவடு [2]தழைசிறை விரித்(து,) உரகன்
மணிமுடி நெளிக்க ; [3]இருமு
வளம் உள முடிப்பவள[4] வரையினை எடுத்து,நடம்
இடல்என, மயில் பரியின் மேல்
அருள்விழி கொழிக்க,முக மதிநில(வு) எறிக்க, நினை
அடியவர் களிக்க வருவோய் !
[5]அமணர்கள் பிதற்று கலை[6]அலைகடல் முழக்கம் அற,
அருமறை முழக்க, முறையே,

[7]இருமதுரை யில்பெரிய நதிவிடு திருப்பதிகம்
[8]எதிர்ச்செல விடுத்த பெருமான்,
இருளென [9]மலைக்கும் மலம் அற,உன(து) அடிக்கமலம்
எனது புன் முடிக்கண் அருள்வோய் !
[10]செருவளம் முழக்கும் நிசி [11]சரர்கெட [12]உருத்த இறை !
சிறுபறை முழக்கி யருளே !
[13]செழுமணி மதில்சமர புரியிலுறை சிற்பரம !
சிறுபறை முழக்கி யருளே !

*(1) மரகத மணிக் குவடு - அழகிய மரகத மலையானது. (2) தழை சிறை விரித்து - தழைத்த சிறகை விரித்து. (3) இரு மூ வளம் உள முடி - ஆறு வகையான சிகரங்களைக் கொண்ட. (4) பவள வரையினை - பவள மலையை. (5) அம்மணர்கள் - சமணர்கள். (6) கலை அலை கடல்-(பொய்ம்மை) நூலாகிய அலைக்கும் கடல். (7) இரும் - பெருமையிற் சிறந்த. (8) எதிர்செல - எதிர் ஏற. (9) மலைக்கும் மலம் அற - மோதும் ஆணவம் கெட. (10) செரு வளம் - போரின் வளத்தை. (11) நிசிசரர் - அசுரர். (12) கெட உருத்த இறை - அழியும்படிச் சினந்த இறைவனே ! (13) செழுமணி மதில் - செழுமையான மணிகள் பதித்த மதில்கள். (10)*

# 10. சிறுதேர்ப் பருவம்

(கவிராஜ பண்டாரத்தையா அருளிய)

# திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்

[சிறுதேர் உருட்டி மகிழ்வது ; இருபத்தொன்றும் மாதத்தில் இது நிகழும் என்பர்.]

---

**92.** இசைக்குழலும் வீணையும் கஞ்சமும் பல்லியமும்
எல்லாம் பயின்று பாடி,
[1]ஏறுதகர் ஆனை[2]பரி தேர்[3]உகைத்தும், கடல்கள்
ஏழையும் துளி யாக்கியே ;
[4]வசைத்தொழில் அரக்கர்கள் [5]துணுக்கென மலைத்(து,) அமரர்
வஞ்சகம் இ(து) என்(று) அயிர்ப்ப,
வானவர்கள், தானவர்கள் செய்கை யென்றே மதி
[6]மருண்டுளம் வெருண்டு சோர ;
[7]மிசைப்படும் [8]உடுக்கதிர் கனைத்தலை [9]மயக்கி, மக
மேருவை முறித்(து) [10]உழக்கி,
[11]விண்டு விண்(டு) அண்டம் குலுங்கக் குலுங்க[12]நவ
வீரர்கள், [13]இலக்கர் சூழத்
[14]திசைக்கிரி யனைத்தையும் உருட்டிவிளை யாடும் நீ
சிறுதேர் உருட்டி யருளே !
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்!
சிறுதேர் உருட்டி யருளே.

*(1) ஏறு தகர் - (ஊர்தியாக) ஏறுகின்ற ஆடு. (2) பரி - குதிரை. (3) உகைத்தும்-செலுத்தியும். (4) வசைத்தொழில்- சதா நிந்திக்கும் தொழிலையுடைய. (5) துணுக்கென மலைத்து- திடுக்கிடும்படிக் கடும்போர் நிகழ்த்தி. (6) மருண்டு உளம்*

வெருண்டு - மருட்சியடைந்து உள்ளம் பெரிது நடுங்கி. (7) மிசைப் படும் - (வானத்தின்) மேல் இருக்கும். (8) உடுக் கதிர்களை - ஒளியுடைய நட்சத்திரங்களை. (9) தலை மயக்கி - இடம் வேறுபட மயங்க வைத்து. (10) உழக்கி - நிலைகுலையச் செய்து. (11) விண்டு விண்டு - (ஒவ்வொன்றாகப்) பல பிளவு பட்டு. (12) நவவீரர்கள் - (வீரவாகு முதலிய) ஒன்பது சோதரர். (13) இலக்கர் - இலட்சம் வீரர்கள். (14) திசைக்கிரி - எட்டுத்திசை மலைகள். (1)

93. [1]புவியுலகு துயரகல [2]அசுமேத யாகம்
புரிந்து,பல வேள்வி யாற்றிப்,
புண்ணியமும் வீரமும் செல்வமும் கல்வியும்
[3]பொன்றாத ஆடவர்களால்,
அவியுணவை அநுதினம் [4]விழைத்(து,)உம்பர் [5]வாய்வயி(று)
அனைத்தும் தெவிட்ட ஓட்டி,
ஆநந்தம் அதுபெருகி, மனதுருகி விழிசொருகி,
அசையாமல், மேடைதோறும்
[6]குவிஉபய முலையின்மிசை வீணைசேர்த் துச்சுருதி
கூட்டி, யெழு [7]கரமு மூட்டிக்
கோதையர் குயில்குதலை மழலைமொழி அமுதினொடு
கூட,வாசிக்கும் இசையால்
[8]செவியுணவும் [9]அன்னவற்(கு) [10]உதவுபண் பைக்(கு) அதிப!
சிறுதேர் உருட்டி யருளே!
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டி யருளே!

(1) புவியுலகு - நிலவுலகினர். (2) அசுமேத யாகம் அஸ்வமேத வேள்வி. (3) பொன்றாத-கெடாத. (4) விழைத்து உம்பர் - விரும்பிய வானவர்களுடைய. (5) வாய் வயிறு அனைத்தும் தெவிட்ட ஒட்டி - வாயும் வயிறும் எல்லாம் தெவிட்டும்படிச் செலுத்தி. (6) குவி உபய முலையின் மிசை

குவிந்த இரு குயங்களின் மேல். (7) எழு காமும் மூட்டி - ஏழு ஸ்வரங்களையும் பெருகியெழச் செய்து. (8) செவி யுண வும் - (வானவர்க்கு முன் ஊட்டிய வர்யுணவுடன்) செவிக்கு உணவையும். (9) அன்னவர்க்கு - அத்தேவர்கட்கு. (10) பண்பைக்கு - பண்புளி எனும் பதிக்கு. (2)

**94.** [1]உகழும் [2]பரித்தொகை, [3]கரித்தொகை,பல் இரதமுடன்
ஒளிரும் வாள் அவுணர் மாள,
உன்னுடைய போர்வாழி ; சென்(று)அறுப்பச்,[4]சூரன்
ஒருவனே நின்று, நெஞ்சை
[5]அகழும் பெருங்கவலை கொண்(டு,)அதி சயித்து,[6]விழி
அழல் உகுத்(து) [7]எயிறதுக்கி,
அப்படி அவன் படையும் இப்படி முடிப்பனென
[8]அன்னவன் முன்னி ஏவப்,
புகழ்கொண்ட திறல்வீர வாகுவுடன், நவவீரர்,
பூதர்கள், இலக்கர் தம்மைப்
[9]புந்தியை மயக்கி, ஒரு நொடியில் வாரிக் கொண்டு
போய், அண்ட கோளகையின் மேல்
[10]திகழ் இந்த்ர ஞாலப் [11]பெருதிதேர் [12]பறித்த நீ,
சிறுதேர் உருட்டி யருளே !
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டி யருளே !

(1) உகழும் - பாயும். (2) பரித்தொகை - குதிரைப்படை. (3) கரித்தொகை - யானைப்படை. (4) அறுப்ப - (வேரொடு) அழிப்ப. (5) அகழும் - பிளக்கும். (6) விழி அழல் உகுத்து - கண்ணெருப்புச் சிந்தி. (7) எயிறு அதுக்கி - பற்களை நறநற என்று மென்று. (8) அன்னவன் - அந்த முருகன். (9) புந்தியை - அறிவை. (10) திகழ் - தங்கி யிருந்த. (11) பெருதி தேர் - பெரிய தேரை. (12) பறித்த - கவர்ந்த. (3)

95. [1]உருத்(து) ஆரவாரித் திடும்கொடிய [2]நிசிசரர்,
உமாபதி [3]வலக்கண் எதிரும்
ஒரு[4]மருகன் [5]நடவுகளி(று) ஒத்திருந்(து) ஓடவே ;
[6]உம்பர் கோமான் [7]புரக்கும்,
[8]தருத்தாம [9]நந்தன வனம் செழித்(து,)[10]அதில்உறு
[11]சராசரம் எலாம் தழைப்பச் ;
[12]சாபநா ணும்,[13]பூணும் ஆபரண மும்[14]திகழ் ;
சரக்கறை மிகத் தழைப்ப ;
[15]மருத்தா மரைத்தவி சுடைப்பாக[16] னும்,சிலை
வளைத்தெய்தி டாத[17]கணையும்,
[18]வாசியும் [19]பேசிய திருப்புகழ் விருப்புடன்
வழுத்தித் துதிக்க வந்த
திருத்தாதை[20]யேறும் பெருந்தேரும்[21] வாழ்கவே
சிறுதேர் உருட்டி யருளே !
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள் !
சிறுதேர் உருட்டி யருளே !

*(1) உருத்து - உக்கிர கோபம் கொண்டு. (2) நிசிசரர் - நள்ளிரவில் உலவுகின்ற (திரிபுர) அவுணர்கள். (3) வலக்கண் எதிரும் - வலக்கண்(ணான சூரியன்) முன்னிற்கும். (4) மருகன் - மன்மதன்; மைத்துனராகிய திருமால் மகனான மன்மதன், சிவத்திற்கு மருகன் முறையாதல் ஓர்க. (5) நடவு களிறு ஒத்திருந்து ஓடவே - (மன்மதன் ஏறி) நடத்தும் யானை(யான இருள்)போலப் புறம் கொடுக்க; கரும்பை வில் என்றும், மலரைக் கணை என்றும், தென்றலைத் தேர் என்றும், இருளைக் காமன் ஏறும் களிறு என்றும் கூறுவது மரபு. (6) உம்பர் கோமான் - தேவேந்திரன். (7) புரக்கும்- காக்கும். (8) தரு-(கற்பகம் முதலிய) ஐந்து தருக்களை யுடைய. (9) தாமம் - ஒளி; மலர் மாலையுமாம். (10) அதில் உறு - அந் நந்தன வனத்தில் உள்ள. (11) சராசரம் எலாம் -*

*இயங்கு திணை நிலைத்திணையான விண்ணுலகம் முழுவதும். (12) சாப நாணும் - (மேரு) வில்லில் நாணியான வாசுகியும். (13) பூணும் ஆபரணமும் - அணியும் அணிகலனான பாம்பு களும். (14) திகழ் சரக்கறை-(அந்த ஆபரணங்களை வைக்கும் பெட்டியாக) விளங்கிய பாதலமும். (15) மரு - மணம். (16) பாகனும் - (தேர்ப்) பாகனான பிரமனும். (17) கணையும் - அம்பான திருமாலும். (18) வாசியும் - (தேரில் பூட்டிய) குதிரைகளான வேதங்களும். (19) பேசிய - (இயற்கை) விளம்பிய. (20) தாதை - சிவபிரான். (21) தேரும் - தேரான பூமியும். முப்புர அவுணர், பரிதிமுன் இருளெனப் பறந் தோடவும், பாதலமும் விண்ணுலகும் பயனடையவும், நில வுலகம் வாழவும், நீ சிறுதேர் செலுத்தியருள் என முடிக்க.* (4)

**96.** [1]கனம்திகழ் [2]கிரிக்குலம் இரண்டையும் எறிந்து, வெம்
[3]காஞ்சனத் தளிர்மாவையும்
கண்டதுண் டப்பட முறித்(து,) [4]இரு வகைப் புலவர்
[5]காரகம் துள்படுத்தி,
[6]இனந்தனை முடிந்தவன் [7]இவன்றனையும் வெல்வதற்(கு)
இது சமயம் என்று, மலைகள்
எல்லாம் திரண்(டு)[8]உபய மாகிமா [9]வடிவுடன்
இணங்கி[10]அமர் ஆடுவனபோல்
[11]வனந்தனை விருப்பொடு புரந்தருள் [12]குறத்திமான்
[13]மதமொழுகு வன முலைகளும்
[14]வள்ளைச் செழுங்குழையில், வாசக் கருங்குழலில்
[15]வாவிவிளை யாடு விழியும்
தினந்தினம் [16]உரத்தொடு பொரக் குழையும்[17] விரகனே!
சிறுதேர் உருட்டி யருளே!
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டி யருளே!

(1) கனம்திகழ் – மேகங்கள் (இளைப்பாறத்) தங்கியிருக்கின்ற. '(2) கிரிக்குலம் - கிரவுஞ்சம்; (இறுதியில் சூரனை மறைத்துக் காத்த) மாயா மலை. (3) காஞ்சனத் தளிர் மரவையும் - பொன்னிறத் தளிர்களையுடைய (சூரபதுமனாகிய) மாமரத்தையும். (4) இருவகைப் புலவர் - விண்ணவர்களாகிய புலவர், நிலவுலகப் புலவர்கள் ஆன இரண்டிடத்து அறிஞர்களும் ; விண் புலவர் மண்ணை விரும்புவர் ; பூவுலகப் புலவர்கள் பொன்னை விரும்புவர் ; ஊன்றி இந் நுட்பம் உணர்வதற்கு உரியது ; விரிப்பிற் பெருகும். (5) கார் அகம் – மூல மலத்தால் இருண்ட மனநினைவை. (6) இனந்தனை முடித்தவன் - (தன்) இனத்தை அழித்தவனை. (7) இவன் தனையும் - இந்த முருகனையும். (8) உபயமாகி - இரண்டு உருவம் கொண்டு. (9) மா வடுவுடன் இணங்கி - (தனங்களில் பூசிய குங்குமக் குழம்பும், கஸ்தூரியுடன் சந்தனச் சேறும் விளைவிக்கும்) பேரடையாளத்துடன் (திருமார்பில்) பொருந்தி. (10) அமர் - கலவிப்போர் (11) வனந்தனை - தினைப்புனத்தை. (12) குறத்திமான் - மருண்ட மான்போலும் கண்களை யுடைய வள்ளியம்மை. (13) மதம் - கஸ்தூரிக் குழம்பு. வள்ளை - வள்ளை யிலைபோன்ற செவி(யில் தரித்த). (14) வாசம்-மணம் வீசும். (15) வாவி - தாவி. (16) உரத்தொடு பொர - வன்மையொடு மோத. (17) விரகனே – மோக தாகனே. (5)

97. பெருகு கருணைக்கடல் [1]உவட்டெறிந்(து,) அருளொழுகு
பெரிய பன்னிரு விழிகளும் ;
பேரழகு பெறுநுதல் [2]களும்;திலத மும்;தெருள்
பிரணவம் சொலும் வாய்களும் ;
[3]இருவனிதை யர்க்குமயல் செயும்[4]மந்த காசமுடன்,
[5]இலகும் ஈராறு குழையும் ;
[6]ஏரிலகு நாசிகள், [7]கபோலங்கள் அத்தனையும்
எழில்சிறந்(து) ஒளி ததும்பி,

[8]முருகு கமழ் சண்முகத் தாமரைகளே பின்னும்
முன்னும் [9]விக சித்திடுதலால்,
முத்தமிழ்ப் புலவர்க்கும், அடியர்க்கும், அமரர்க்கும்,
முனிவரொடு சூரனுக்கும்,
[10]திருமுதுகு தாராத [11]தண்ணளிச் சேவகன் !
சிறுதேர் உருட்டி யருளே !
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டி யருளே !

(1) உவட்டெறிந்து - மிக்குப் பெருகி. (2) நுதல்களும் - நெற்றிகளும். (3) இரு வனிதையர்க்கு - வனப்புடைய இரு தேவியர்க்கு. (4) மந்தகாசமுடன் - புன்னகையுடன். (5) இலகும் - விளங்கும். (6) ஏர் இலகு - அழகு துலங்கும். (7) கபோலங்கள் - கன்னங்கள். (8) முருகு-மணம் ; திருமுக கமலங்கள், பெரும் திசை நான்கும் விண்ணும் மண்ணும் நோக்கலின், பின்னும் முன்னும் என்றார். (9) விகசித்திடுதலால் - பிரகாசித்தலால். (10) திருமுதுகு தாராத - புறங் காட்டாத ; எனவே, முகங்காட்டும் என்றபடி. (11) தண் அளிச் சேவகன் - குளிர்ந்த அருளார்ந்த வீர முருகன். (6)

98. அரிக்கும் அயனுக்கும்[1]வெரு வாதசூர் வென்றது,கை
[2]அயிலோ ; [3]அன்னோர்கள் படையோ ;
அப்பனுக் கும்பொருள் நிரப்பிய குருக்கள் என்(று,)
[4]ஆரணத் தொகை புகலுமே ;
[5]பரிக்குமயி லுக்கும்,ஒரு சேவல் கொடிக்கும், இணை
பகர ஒரு பொருளும் இல்லை ;
பதினயிரம் கோடி மன்மதர் அழகுநின்
பாத தூளிக்கு நிகரோ ;

[6]புரிக்குள் உயர் பொன்னுலகு, நின்னுடைய [7]பண்பா
புரிக்கு நிகர் ஒப்பாகுமோ ;
[8]பூதரம் எலாம்இருந் தும்,சுனையில் ஓர்குவளை
பூத்த திரு மலை யொக்குமோ ;
[9]தெரிக்கில் உல கத்(து,) உவமை யில்லாத தெய்வம் நீ
சிறுதேர் உருட்டி யருளே !
சிவஞான முத்திதரு திருமா மலைக் கடவுள்
சிறுதேர் உருட்டி யருளே !

*(1) வெருவாத சூர் - அஞ்சாத சூரபதுமனை. (2) அயிலோ - வேல்படையோ (3) அன்னோர்கள் படையோ - பிரம்மாஸ்திர நாராயண அஸ்திரங்களோ. (4) ஆரணத் தொகை - வேத சாகைகள். (5) பரிக்கும்-தாங்கும். (6) புரிக்குள் - நகரங்கட்குள். (7) பண்பாபுரி - திருமலையைச் சூழ்ந்த பண்புழி எனும் பதி. (8) பூதரம் - மலை ; இது, (வேரால்) நிலத்தைத் தாங்குவது எனப் பொருள்படும் வடசொல். (9) தெரிக்கில் - சிந்தனை செய்து நோக்கினால்.* (7)

**99.** [1]பாரோடு பதினாலு லோகத்தில் உள்ள வெம்
பழியோடு பாவம் ஓடப்,
பஞ்சம்ஓ டக்,கொடுமை அஞ்சிஓ டத்தமிழ்ப்
பாவலர்கள் வறுமை ஓடச்,
[2]சூரோட, அவுணர்கள் பயந்தோட, வானவர்கள்
துன்பம் கலங்கி ஓடச்,
சொல்லோடு பழகாத புலவரோ டப்,பழைய
தொண்டர் மன மாயை ஓட,
[3]வாரோடு கொங்கைமட வாரோடும், இளைஞர், தம்
[4]மனையோடு மேவி வாழ,
வந்துதரி சித்துளோர் பிணியோட, அங்கவர்
மனத்துயர் அனைத்தும் ஓடத்,

தேரோடி வரும்வீதி திகழ்பண்பை வாழவே,
சிறுதேர் உருட்டி யருளே !
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டி யருளே !

(1) பாரோடு - நில வுலகுடன். (2) சூர் ஓட - சூரபதுமன் ஓட. (3) வாரோடு - கச்சுடன். (4) மனையோடு - (தம்) திருமாளிகையில். (8)

**100.** பொன் [1]மௌலியும், கருணை பொழிவதன[2]மும்,திருப்
புருவமும், நெற்றி யழகும்,
[3]புண்டரிக நயனஅரு ளும்,குழைக ளும்,தமிழ்ப்
புத்தமுதம் ஒத்த வாயும்,
[4]வின்மலிந்(து) இலகுகூ ரிய[5]துண்ட மும்,கவின்
விளங்கியக [6]போலங்களும்,
வெண்தரள மாலையணி கண்டமும், திண்புயமும்,
வேலும்[7]முள ரிக்கைகளும்,
[8]பன்மணியும், [9]நூலும்,[10]மணி மார்பமும்,[11]தோயாத
பட்டுடையும், மிக்க[12]தண்டைப்
பாதமும், தோகைமயி லும்,சிந்தை யுள்ளே
பதித்துத், துதிக்கும் அடியார்
சென்மஇருள் முழுதும் விடி[13]யக்கூவு சேவலாய் !
சிறுதேர் உருட்டி யருளே !
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள் !
சிறுதேர் உருட்டி யருளே !

(1) மௌலியும் - மகுடமும். (2) வதனமும் - திருமுகமும். (3) புண்டரிக நயன அருளும் - கமலம் போன்ற கண்களின் கருணையும். (4) வில் மலிந்து இலகு - ஒளி நிறைந்து விளங்கும். (5) துண்டமும் - நாசியும். (6) கபோலங்களும் - கன்னங்களும். (7) முளரி - தாமரை. (8) பன்மணி

*யும் - பல ரத்ன மாலையும். (9) நூலும்-முந்நூலும். (10) மணி மார்பமும் - அழகிய திருமார்பும். (11) தோயாத - (சாயம்) தோய்க்காத; இயற்கை நிறமான என்றபடி. (12) தண்டை - தண்டை யணிந்த. (13) விடிய - அகல.* (9)

**101.** மங்கல [1]மடப்பிடி, [2]குறக்கொடி, யிடத்தினும்
வலத்தினும் இருந்து வாழ்க ;
மாமயிலும் வாழ்க ; அதன் மேல்இலகு [3]நூபுரம்
வனைந்த சேவடியும் வாழ்க ;
பொங்கொளி [4]தயங்குதிரு ஆபரணம், முந்நூல்
புனைந்திடு பொன் மார்பும் வாழ்க ;
போர்வேலும், ஈராறு செங்கையும், பன்னிரு
புயங்கள் [5]சுந்தரமும் வாழ்க ;
தங்குகரு ணைக்கண்கள் ஆறிரண் டும்,திருச்
சண்முகத்(து) அருளும் வாழ்க ;
[6]தாழ்குழைமுந் நான்கினொடு, பவளவாய் ஆறுடன்
தடமகுடம் இனிது வாழ்க ;
[7]திங்களும் மாரிபொழி யச்,சேவல் வாழ்க;நீ
சிறுதேர் உருட்டி யருளே !
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள் !
சிறுதேர் உருட்டி யருளே !



*(1) மடப்பிடி - தேவயானை. (2) குறக்கொடி - வள்ளி நாச்சியார். (3) நூபுரம் வனைந்த - சிலம்பணிந்த. (4) தயங்கு - பிரகாசிக்கும். (5) சுந்தரமும் - பேரழகும். (6) தாழ்குழை முந்நான்கினொடு - (செவியிலிருந்து) தொங்கும் பன்னிரண்டு குழையெனும் அணிகளுடன். (7) திங்கள் - மாதம்.* (10)

**முருகன் பாராயணப் பிள்ளைத்தமிழ்**
**நிறைகிறது.**

---

## தினப்பலன் : ஓரையும்—கௌரியும்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஞாயிறு ... | சுக்கிரன் அமுதம் 7—8 7-30—8 | சந்திரன் 9—10 | குரு லாபம் 11—12 | எமகண்டம் 12—1-30 | சுக்கிரன் 2—3 சுகம் | சந்திரன் 4—4.30 | இராகு காலம் 4.30—6 |
| திங்கள் ... | சந்திரன் 6—7 அமுதம் | இராகு காலம் 7.30—9 | எமகண்டம் 10-30—12 | சந்திரன் 1—2 1—1.30 தனம் | குரு 3—4 லாபம் | சுக்கிரன் 6—7 சுகம் | சந்திரன் 8—9 சுகம் |
| செவ்வாய் ... | சுக்கிரன் 8—9 லாபம் | எமகண்டம் 9—10 30 | சந்திரன் 10-30—11 சுகம் | குரு 12—1 | இராகு காலம் 3—4-30 | சந்திரன் 5—6 அமுதம் | குரு 7—8 |
| புதன் ... | சந்திரன் 7—7-30 லாபம் | எமகண்டம் 7-30—9 | குரு 9—10 சுகம் | இராகு காலம் 12—1-30 | சந்திரன் 2—3 | குரு 4—5 அமுதம் | சுக்கிரன் 7—8 |
| வியாழன் ... | எமகண்டம் 6—7-30 | சுக்கிரன் 9—10 | சந்திரன் 11—12 | குரு 1—1-30 அமுதம் | இராகு காலம் 1-30 3 | சுக்கிரன் 4—5 லாபம் | சந்திரன் 6—7 |
| வெள்ளி ... | சுக்கிரன் 6—7 சுகம் | சந்திரன் 8—9 | குரு 10—10-30 | இராகு காலம் 10-30—12 | சுக்கிரன் 1—2 அமுதம் 1—1-30 | எமகண்டம் 3—4-30 | குரு 5—6 தனம் |
| சனி ... | குரு 7—8 | இராகு காலம் 9—10-30 | சுக்கிரன் 10-30—11 அமுதம் | சந்திரன் 12—1 | எமகண்டம் 1-30—3 | சுக்கிரன் 5—6 சுகம் | சந்திரன் 7—7-30 லாபம் |

இராகுகாலம் எமகண்டம் நீங்கலாக, இதனில் குறித்த உத்தம காலங்களில் பழநியாண்டவரைத்

# அறிவிப்பு

1. பழனியில், யாத்ரீகர்கள் வசதியாய் தங்கத் தக்க இடம் தேவஸ்தான சத்திரம் தான் (ரயில்வே பீடர் ரோடிலுள்ளது.)

2. பழனிமலைக் கோயிலில் குழந்தைகட்குச் சூடான பசும்பால் இலவசமாய் வழங்கப் படுகிறது.

3. ஆண்டவன் அபிஷேக விபூதி, வெளியூர் ஆஸ்பத்திரிகட்கு இலவசமாய் அனுப்பி, நோயாளிகட்கு விநியோகம் செய்யப்பட்டு வருகிறது.

4. ஏழை விடுதி ஒன்று தேவஸ்தான செலவில் நடத்தப்பட்டு வருகிறது. இதற்கு அன்பளிப்பு செலுத்த விரும்பும் பக்தர்கள், மலைக்கோயில், சத்திரம் இவ்விடங்களில் செலுத்தி அச்சு ரசீது பெற்றுக் கொள்ளலாம்.